






بسم الله الرحمن الرحيم

# அல்கலாம்

# AL-KALAM

பத்திராதிபர்:—சூ. அ. அப்துல் மஜீத்.

| வால்யூம். 4 | 1927௵ மார்ச்சு௴ | பகுதி. 3 |
|---|---|---|



## ஜகாத்தை பெறவேண்டியவர்கள் யார்?

ஜகாத்தை (1) பகீர்களுக்கும், (2) மிஸ்கீன்களுக்கும், (3) அதை வசூலிப்பவர்களுக்கும், (4) புதிய முஸ்லிம்களுக்கும், (5). அடிமைகளை விடுவிப்பதற்கும், (6) கடனைத்தீர்க்க வகையற்றவர்களின் கடனைத் தீர்ப்பதற்கும், (7) ஜிஹாத்துக்கும், (8) வழிப்போக்கர்களுக்கும் கொடுக்கவேண்டும். இவர்களில் முதல் இருவகையினரைத் தவிர, மற்றவகையினருக்கு நம்மவர்கள் ஜகாத்தைக்கொடுப்பதாகத் தெரியவில்லை. ஜகாத்து என்று தெரிந்தோ, தெரியாமலோ அதை வாங்கிக் கொள்ளுகிறவர்கள், யாராகவிருப்பினும், அவர்களை மேற்கூறப்பட்டுள்ள பகீர்களென்றும், மிஸ்கீன்களென்றும் நினைத்துக் கொண்டு, ஜகாத்தைக் கொடுத்துவிடுவதாக யூகிக்கவேண்டியதா யிருக்கின்றது.

"ஜகாத்து, ஸதகா முதலிய தர்மங்களால் எதற்கும் உதவாது நசுக்குண்டுபோகும் பிச்சைக்காரக் கூட்டத்தை தயார்செய்ய 'இஸ்லாம்' கருதுவதாய் யாருஞ் சந்தேகிக்கவேண்டாம்." பரிசுத்த குர்ஆன் ஷரீபாகிறது ஜகாத்தையும், ஸதகாவையும், செலவு செய்யவேண்டிய இனம், இன்னதுதான் என்றுவியக்தமாய் குறிப்பிட்டுவிட்டது. அதேவிதமாக இஸ்லாம் நடந்தும் வந்தது.

"ஹதீது ஷரீபில்" வருகின்றதாவது:— பணக்காரர்களுக்கும், அதை சம்பாதிக்க சக்தியுள்ளவர்களுக்கும், அவயவங்கள் பின்னமில்லாதவர்களுக்கும் 'கைராத் ஹலால்—ஆகுமானதல்ல. (திர்மதீ)

நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களுடைய இறுதி ஹஜ்ஜில் ஸதகாவின் தொகையை வினியோகஞ் செய்துகொண்டிருந்தபோழ்து, அதை வாங்குவதற்கு வந்த இருவரைக்கண்டதும் (நாயகம் அவர்கள்) தங்களுடைய பார்வையை கீழ்புற மாக்கிக்கொண்டார்கள். வந்த அவ்விருவரும் மெத்த பலசாலிகளாகவும், அவயவங்களில் யாதொரு பின்னமில்லாதவர்களாகவுமிருந்தார்கள். நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் (அவ்விருவருக்கும்) அறிவித்ததாவது:— "தாங்களிருவருங் கேட்டால் தருகிறேன். என்றாலும், பணக்காரர்களுக்கும், பொருள் சம்பாதிக்க சக்தியுள்ளவர்களுக்கும் இதில் (ஸதகாவில்) பாகமில்லை." (அபூதாவூத்)

நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் ஒருமனிதன் வந்து, "யாரஸூலல்லாஹ்! ஏதாவது ஜகாத்துக் கொடுங்கள்" என்று கேட்டபோழ்து, "அல்லாஹுதஆலா ஜகாத்து விஷயத்தில் எந்த நபியுடையவும், நபியல்லாதவர்களுடையவுமான தீர்மானத்தை சம்மதியாமல், அதைத்தானே எட்டு (வகையானவர்களுக்கென்று) பாகமாக்கிவிட்டான். (அவ்வெட்டுவகையில்) ஏதாவதொரு வகையைச் சேர்ந்தவராக நீர்விருப்பீராயின், நான் உமக்குத் தருகிறேன்" என்று திருவுளமானார்கள். (அபூதாவூத்)

உங்களில் யாராவது கயறு எடுத்துப்போய் விறகுகட்டி சுமந்து விற்பவர்கள், மனிதர்களிடம் போய் யாசித்து வாங்குகிறவர்களைக் காட்டிலும் நல்லவர்களாகவும், அல்லாஹுதஆலாவிடத்தில் மரியாதையுள்ளவர்களாகவும் இருப்பார்களென்று, நமது நாயகம் ரஸூலகரீம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியதாக, ஹஜ்ரத் ஜுபை ரிபுனு அவாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் ரிவாயத்து செய்யப்பட்டிருக்கிறது. (புகாரி) எவன் மனிதர்களிடத்தில் சுவால்செய்து (கோட்டுவாங்கிக்)கொண்டிருக்கிறானோ? அவன் கியாமநாளன்று முகத்தில் மாமிசமில்லாதவனாக வருவானென்று, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியிருக்கின்றார்கள். (தார்குத்னி) மனிதர்களிடத்தில் சுவால் செய்யவேண்டாம். சுவால் செய்யாதவர்களுக்கு(நான்) சுவர்க்கலோகத்தை வாக்குச்செய்கிறேன். எவன் என்னுடைய (இந்த) ஒரு வார்த்தையை ஒப்புக்கொள்ளுகிறான்? என்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்



ஹஜ்ரத் தௌபான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடத்தில் அறிவித்தார்கள். (அபூதாவூத்)

நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் வந்து, ஏதாவது தரும்படியாய் கேட்ட ஒரு மனிதனைப் (பார்த்து) "உன்னிடத்தில் ஏதாவது இருக்கிறதா?" என்று நாயகம் அவர்கள் கேட்டதற்கு, ஒரு கம்பளி தன்னிடம் இருப்பதாக அம்மனிதன் தெரிவித்தான். ஆகவே, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் (அக்) கம்பளியை விற்று, காட்டிலிருந்து விறகு வெட்டி வந்து, விற்கும்படி கோடரி வாங்கிக்கொடுத்தார்கள்.

கேட்டுவாங்குவதற்கு மார்க்க சட்டப்படி பாத்திய மில்லாத ஒரு பிச்சைக்காரன், ஹஜ்ரத் உமர்ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் வந்தான். அவனைப் பிடித்து ஒருவரிடம் வேலைக்கு அமர்த்தி விட்டார்கள். கஉபாவில் பிச்சைகேட்ட ஒரு மனிதனை, ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பார்த்து, அவனை கடுமையாக சிக்ஷித்தார்கள்.

பொருள் சம்பாதிக்கச் சக்தியற்று, உடுத்த வஸ்திரமின்றி, ஒருவேளை சாப்பாட்டிற்குக்கூட இல்லாதிருப்பவனையே மார்க்கத்தில் 'பகீர்' என்று சொல்லப்படுகின்றது. பொருள் சம்பாதிக்க சக்தியுள்ளவன் 'பகீர்' அல்ல, இப்படிப்பட்டவனுக்கு ஜகாத்துக்கொடுத்தால், அதைக்கொண்டு அவன் சுயமாகவே பொருள் சம்பாதித்துக் கொள்ளும்படி தூண்டக்கூடியதாகக் கொடுக்கலாமே தவிர, ஜகாத்துக் கொடுப்பதை முன்னிட்டு, அவனொரு வீணன சின்னமாகி, சம்பாதிப்பதையே விட்டொழிக்குமாறு கொடுக்கக்கூடாது. வேலை செய்து பொருள்சம்பாதிக்கக்கூடிய சக்தியிருந்தும், அப்படிச் செய்யாமல் யாசிப்பதையே தொழிலாகக் கொண்டிருக்கிற 'பகீர்'களுக்குயார் (ஜகாத்து) கொடுக்கிறார்களோ, அவர்களின் ஜகாத்து நிறைவேறமாட்டாது. வேலை செய்வதற்கு தகுதியுடைய பகீர் விறகு வெட்டிவந்து, தானே பொருள் சம்பாதித்துக்கொள்ளும்படி, அவனுக்குக் கோடரி வாங்கிக்கொடுக்க வேண்டுமாய் மார்க்கம் உத்தரவுசெய்கின்றது.

குடும்பம் பெரியதாக இருப்பதால், வரும்படியைப் பார்க்கிலும் செலவு அதிகமாய்ச் செய்யவேண்டிய கட்டாயத்திற்காளானவனை மார்க்கத்தில் மிஸ்கீனென்று சொல்லப்படும். அவன் அனுவசியமாகவும், வீணாகவும், மார்க்கத்திற்கு விரோதமானவகையில் செலவுசெய்கிறவனாயிருந்தால் அவனை மிஸ்கீனென்று சொல்லப்படமாட்டாது. ஆகவே, (ஜகாத்தைக் கொடுக்கும் போழ்து) அவன் எப்படிப்பட்டவனென்று கவனிக்க வேணுமாய் உலமாக்கள் கூறுகின்றார்கள்.

“அவசியமின்றி கேட்டுவாங்குவதை இஸ்லாம் ஹறுமாக்கியிருக்கின்றது.” பிச்சை வாங்குவதையே தொழிலாக்கிக் கொண்டவர்களுக்கு கொடுப்பது பாவமென்று கீர்த்திபெற்ற உலமாக்கள் கூறுகின்றார்கள். ஏனென்றால், அப்படிப்பட்டவர்களுக்கு கொடுப்பது பாவச்செயலைச்செய்வதில் தைரியமுண்டாக்குவதாகவோ, அல்லது அத்தொழிலைத் தட்டிக் கொடுப்பதாகவோயிருக்கின்றது. ஆகவே, அப்படிப்பட்டவர்களுக்கு பிச்சைக்கொடுப்பதை நாம் நிறுத்திவிடுவோமானால், அவர்கள் தானாகவே பிச்சைவாங்குவதை விட்டுவிடும்படியான கட்டாயத்திற்காளாகி விடுவார்கள். நாளாக ஆக இழிவான இந்த கெட்ட பழக்கம் அழிந்து தொலைந்துபோவதோடு, ஜகாத்து, ஸதகா ஆகியவைகளின் தொகைகள் அதைப்பெற அருகதையானவர்களைப் போய்ச்சேரும். பல பிச்சைக்காரர்கள் நஞ்சை, புஞ்சை, பூஸ்திதிகளையுடையவர்களாகவும், வட்டிக்குப் பணம் கொடுக்கிறவர்களாகவும் காணப்படுகின்றார்கள். அப்படிப்பட்டவர்களும், நாள் தவறாமல் ஜோல்னாவைப் போட்டுக்கொண்டு வீடு வீடாகவந்து நிற்கிறார்கள். அவர்களை நோக்கி “நீங்கள் சுவால் செய்வது ஹறாம்; அல்லாஹுத ஆலாவின் கிருபையால் உங்கள் கைகால்கள் பின்னமில்லாதவைகளாக விருக்கின்றன. ஆகையால், நீங்கள் கூலிவேலையாவது செய்தால் என்ன?” என்று சொல்லப்படுமானால், “இது எங்களுடைய பூர்வீக பரம்பரையான தொழிலாகையால் இதைவிடமுடியாது” என்று அப்பிச்சைக்காரர்கள் பதில் சொல்லிவிடுகிறார்கள். இழிவான இந்த கெட்டவழக்கத்தை ஒழிப்பதற்கு நாம் மேற்கூறிய வழியே மிக்க சிலாக்கியமானது. பிச்சைக் கொடுப்பது நின்று விட்டால் அவர்கள் கூலிவேலை முதலியதுகள் செய்யாதிருக்கமுடியாது. முஸ்லிம் சகோதரர்கள் தங்களுடைய கைராத், ஜகாத், ஸதகா முதலியன எதுவாகவிருப்பினும் அவைகள் பிச்சைவாங்குவதைத் தொழிலாய்க் கொண்டிருப்பவர்கள் கையில் போய்ச்சேராமல் கவனமாயிருந்தால், அவைகளைப் பெற்றுக் கொள்ள உண்மையான பாத்தியஸ்தர்கள் அதையடையாமலிருக்க முடியாது.

ஜகாத்தின் தொகையைப் பெற்றுக்கொள்ள அருகதையுள்ளவர்களுக்கு பங்கிடுவதற்குத் தகுந்த சட்டத்தையும், ஒழுங்கையும் இஸ்லாம் ஏற்படுத்தியிருக்கின்றது. ஆகவே, எல்லா தேசத்து ஜகாத்தையும் பைத்துல்மாலில் சேகரித்து, கிலாபத்தின் மேற்பார்வையில் அதைப் பெற்றுக்கொள்ள பாத்தியமுள்ளவர்களுக்கு, அவர்களின்தேவைக்குப் போதியவாறு கொடுக்கப்படவேண்டும்.



ஆகையால், மேலே சொன்ன பாராக்களில் (1) ஜகாத்தை வருவிப்பவர்கள் இருக்கவேண்டுமென்றும், அவர்களுக்கு ஜகாத்துத் தொகையில் சுதந்தரம் உண்டென்றும்,

(2) ஜகாத்தை வாங்கிக்கொள்ள இஷ்டமுள்ளவர்கள் யாராயிருப்பினும், அவர்களை பகீர்களென்றும், மிஸ்கீன்களென்றும் நினைத்துக் கொண்டு அவர்களுக்கு ஜகாத்தைக் கொடுக்கக்கூடாதென்றும்,

(3) உண்மையில் பகீர்களாகவோ, அல்லது மிஸ்கீன்களாகவோ இல்லாதவர்களுக்கும், பிச்சை வாங்குவதையே தொழிலாக்கிக்கொண்டவர்களுக்கும் ஜகாத்தைக் கொடுத்தால் அஜ்ஜகாத்து நிறைவேறாதென்றும்,

(4) யாசிப்பதை தொழிலாக்கிக் கொண்டவர்களுக்கு கொடுப்பது பாவமென்றும், அவர்களிடத்தில் முஸ்லிம்களுடைய ஸதகா, ஜகாத், கைராத் முதலிய எதுவும் போய்ச்சேராமல் முஸ்லிம் சகோதரர்கள் கவனமாயிருக்கவேண்டுமென்றும் தெரிகிறது.

நம்நாட்டு தனவந்தர்களில் 1,000ல் 5 பேர்வழிகளே ஜகாத்தை கொடுப்பவர்களாக விருக்கின்றனர். ஏனையோர் தங்களிடம் கிட்டிய செல்வம் தங்களுடையதென்றும், தங்கள் பேரில் ஜகாத்து கொடுக்கவேண்டுமென்பது பரலாக்கப்படவில்லை என்றும் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். ரொக்கம், தங்கம், வெள்ளி, நகை, பாத்திரங்கள், புடவைகளிலுள்ள கோட்டா, கினாரி, ஜரிகை முதலியதுகள் பாவிக்கப்பட்டாலும், பாவிக்கப்படாவிட்டாலும் ஜகாத்து கொடுப்பதுதான் கடமை. பெண்களின் நகைகளுக்கு புருஷர்கள் ஜகாத்து கொடுக்காவிட்டால், பெண்களே ஜகாத்துக் கொடுக்க கடமைப்பட்டிருக்கின்றார்கள்.

---



## முஸ்லிம்களும், கல்வி ஸ்தாபனங்களும்.

(6-வது பக்கத் தொடர்ச்சி)

மதராஸயெ நிஜாமியாவில் மாணவர்களுக்கு உபகாரச் சம்பளமுமுண்டு. இஃது நிஜாமியாவின் பிரத்தியேக நன்கொடைகளைச் சார்ந்ததாகும். நிஜாமியாவுக்கு முன்னர் எவரும் மாணவருக்குபகாரச் சம்பளம் கொடுத்திருப்பதாகத் தெரியவில்லை. நிஜாமுல் முல்க், நாடுமுழுவதிலும் ஏற்படுத்திய கல்விச் சாலையைத் தவிர,

நீஷாபூர், ஹிராத், மோசூல், இஸ்பஹான், ஆகிய தேசங்களில் ஏற்
படுத்திய கலாசாலைகளும் 'நி ஜாமியா' வென்றே அழைக்கப்பட்டு
வந்தன. நீண்டகாலம்வரை அதிகப் பிரசித்திபெற்ற மகான்களான
உலமாக்களே அக்கலாசாலைகளின் ஆசிரியர்களாக அமர்ந்து வந்தனர்.
உதாரணமாக, 'ஹிராத்'தின் மதரஸயே நிஜாமியாவுக்கு ஹஜ்ரத்
இமாம் கஜ்ஜாலீ அவர்களின் மாணவரான "அபூஸஃத் மஹ்மூதிப்னு
எஹ்யா" அவர்களும், மோசூலிலிருந்த நிஜாமியாவில் "அபூஹா
மித் முஹிய்யித்தீன்" அவர்களும் ஆசிரியர்களாக விருந்தார்கள்.

'அர்ஜ்ஜானீ' என்னும் மகான் இஸ்பஹானின் நிஜாமியாவில் கல்
விபயின்றிருக்கின்றார்கள். ஆனால்,பக்தாத்திலிருந்த நிஜாமியாவானது
யூனிவர்ஸிடியைப்போலவும், மற்றுமுள்ள மேற்கூறிய இதரகலாசாலை
கள், அதன் கிளை ஸ்தாபனங்களாயு மிருந்தன. பள்ளிக் கூடங்கட்
காகவும், கலாசாலைகட்காகவும், அரசாங்கத்தின் பொக்கிஷத்தி
லிருந்து பெருந்தொகையைச் "நிஜாமுல்முல்க்" செலவிட்டு வந்தா
ராதலின் 'மலிக்ஷாஹ்' என்பவர் நிஜாமுல் முல்க்கை யழைத்து
"அருமைத் தந்தையே! இப்பெருந் தொகையின் மூலமாய் ஒரு
சைன்னியத்தைத் தயாரிக்கக்கூடு மல்லவா? அதைக் கவனியாது,
தாங்கள் கல்வி யபிவிருத்திக்காகச் செய்யும் தானங்களால், மெச்சத்
தக்க பலனேற்படுமா?" என்று சாதாரணமாய் வினவினார். இதற்கு
நிஜாமுல்முல்க் "என்னருமைப் புதல்வரே! நானோ விருத்தாப்பிய
னாகிவிட்டேன். ஆனால், தாங்கள் ஒருநல்ல இளவாலிபரா யிருக்கின்
றீர்கள். உங்களை விற்பதற்காகக் கடைவீதியிற் கொண்டுபோய்
நிறுத்தி வைக்கப்படுமாயின் (150 ரூபாய்) 30 தீனாரைக் காட்டினும்
அதிகக்கிரயத்துக்கு விற்கமுடியாது. இத்தகைய நிலைமையிலுள்ள
உங்களுக்கு அல்லாஹுதஆலா இப்பெரிய தேசத்தை அளித்திருக்
கின்றான். இதற்காக நீங்கள் அல்லாஹுதஆலாவுக்கு நன்றி நிறை
வேற்ற முடியுமா? உங்கள் சைன்னியத்தின் அம்பு, சில அடிகள்
தூரமே சென்று பலனளிக்கக்கூடும். ஆனால், நான் தயாரித்து வரு
கின்ற சைன்னியங்களின் பிரார்த்தனை யென்னும் அம்பை வானங்கள்
கூட தடுக்கவியலாது" என்று அறிவித்தார்கள். இவ்வார்த்தையைச்
செவியுற்ற மலிக்ஷாஹ், "வந்தன மளிக்கின்றேன்! எனதருமைத்
தந்தையே!! உங்களால் இயன்றவரை இத்தகைய சைன்னியங்
களையே திரட்டுங்கள்" என்று அதி குதூகலத்தோடு மொழிந்
தார்கள்.

முஸ்லிம்களின் கல்விச்சரிதையில் மறக்கவியலாததும், அதி ஆச்
சரியத்துக் குரியதுமான ஒரு செய்தியையும் இங்கு குறிப்பிடுவது



அவசியமே. அஃதாவது:—மதரஸயே நிஜாமியாவை யேற்படுத்தப்
பட்டுள்ள வரலாறு முழுதும் மாவராவுன்னகரைச்சார்ந்த உலமாக்
களுக்குத் தெரிந்ததும்,அவர்கள் ஒருதுக்கச் சபையைக்கூட்டி, "இனி
கல்வியை கல்விக்காக வன்றி ஆடம்பரப் பெருமைக்காகவும்,பொருள்,
கௌரவம் ஆகியவைகளைச் சம்பாதிப்பதற்காகவுமே கற்கப்படும்"
என்று அழுதார்கள். (இவ்வரலாறானது பின்னர் நாம் ஒரு தீர்மானத்
தைச் செய்யச் சாதனமாயிருக்கும்.)

மதரஸயெ நிஜாமியாவானது நாடு முழுவதிலும் ஆச்சரியமான
கல்விப்பிரியத்தை மூட்டிவிட்டது. மேலும், அம்மதரஸாவானது
5-வது நூற்றாண்டில் அமைக்கப்பட்டதாயினும், 6-வது நூற்
றாண்டுக்குள் ஸ்பெய்னைத் தவிர, மற்ற இஸ்லாமிய நாடெங்கும்
கல்விச்சாலைகள் ஏற்பட்டு விட்டன. 'குராஸா' னைச்சார்ந்த
'மர்ரூ' நீஷாபூர், ஹிராத், பலக், முதலிய பெரிய மாகாணங்
களும், ஈரானைச்சார்ந்த பாகமும் முன்னமெயே கல்வியறிவுக்கு
முக்கிய ஸ்தலமாகவிருந்தனவாயினும், மதரஸயெ நிஜாமி யாவா
னது அத்தேசங்களை இன்னமும் கௌரவப்படுத்தி விட்டது.
6-வது நூற்றாண்டில் "யாகூதெஹமவீ" என்பவர் 'மர்ரூ' என்
னும் நாட்டிற்குச் சென்றபோது,அந்நாட்டில் அநேக கலாசாலைகளும்,
புத்தகச் சாலைகளுமிருக்கக் கண்டார். புத்தகச் சாலைகளையும் சேர்த்
தமைக்கப்பட்டிருந்த கல்விச் சாலைகளின் நாமங்களாவன:—"முஸ்
தௌபிய்யா," இது, ஷர புல் முல்க் அபூஸஃத் மஹ்மூது இபுனுமன்
ஸூர் அவர்களால் ஏற்படுத்தப்பட்டது. (2) "அம்திய்யா, காது
னிய்யா". இதிலும் சிலபுத்தகச் சாலைகளிருந்தன. 'நிஜாமுல் முல்க்
ஹஸன் இபுனு இஸ்ஹாக்' அவர்களால் 'மர்ரூவில்' ஏற்படுத்தப்பட்டி
ருந்த நிஜாமியாவிலும் புத்தகச் சாலையுண்டு.

"யாகூதெஹமவீ" என்னும் பெரியார் மஃஜமுல் புல் தான்
போன்ற ஆச்சரியமான பெரும் நூலை அப்புத்தக சாலைகளின் சகாயத்
தைக் கொண்டே எழுதிமுடித்தார்கள். (இந்நூல் அரபிபாஷையில்
எழுதப்பட்ட பூகோளசாஸ்திரமாகும். இது சுமார் 4,000 பக்கங்
களைக்கொண்டதாயும் மானிடஅறிவைப்பிரமிக்கச் செய்யக்கூடியதாயு
மிருக்கிறது. மேலும், இந்நூல் ஐரோப்பாவில் அச்சிடப்பட்டுள்ளது).
ஹிஜ்ரீ 556-ல் நீஷாபூரில் நடைபெற்ற சச்சரவானது நீஷாபூரை நாச
த்திற்கிரையாக்கிற்று. அக்கலகமானது, மற்ற கட்டடங்களோடு ஹன
பிய்யா, ஷாபியிய்யா வின் 25 மதரஸாக்களையும், பலபுத்தச்சாலைகளை
யும் தீக்கிரையாக்கின. அல்லது, அக்கல்வி ஸ்தாபனங்கள்
கொள்ளையிடப்பட்டிருக்கவேண்டும். நைரூவில் அல்லாமா ஹுஸைன்

இபுனு அஹ்மத் அபுல்பயல்' என்னும் மகானின் ஆதிக்
கத்தில் மட்டும் 12 மதரஸாக்களிருந்தன. அவைகளில் 1,200
மாணவர்கள் கல்வி பயின்று வந்தனர். ''கவாரி ஜமி''ன் பெரிய கலா
சாலையில்,'இமாம் பஃருத்தீன்ராஜீ' அவர்கள் ஆசிரியராகவிருந்து அக்
கலாசாலைக்கு கௌரவமளித்தார்கள். மிஸ்டர். ஷார்டன் என்னும்
பிரான்ஸ் தேச சஞ்சாரகர் 'ஸபவிய்யா' வகுப்பின் ஆட்சி காலத்தில்
ஈரானைச்சார்ந்த பல பாகங்களைச் சுற்றிப்பார்த்து அவரியற்றி யிருக்
கும் ஒரு நூலில்:—''சுலைமான் ஸபவி'யின் ஆட்சிகாலத்தில், 'இஸ்ப
ஹான்'என்னும் பட்டினத்தில் மட்டும் 48, கல்விச் சாலைகளிருந்தன''
என்று வரைந்திருக்கின்றார்.

''பக்தாதில் மட்டும் மதரஸயே நிஜாமியாவைத் தவிர, 30
பெரிய காலேஜ்களிருந்தன. ஒவ்வொரு காலேஜும் ஒவ்வொரு
ஸ்திரமான பட்டினத்தைப் போலிருந்தது'' என்று இபுனு ஜுபைர்
அவர்கள் கூறியுள்ளார்கள். ஹிஜ்ரீ 578-ல் மேற்கூறப்பட்ட அல்
லாமா அவர்கள் பக்தாத் நகரைக் கண்ணுற்ற போது இருந்த சில
கலாசாலைகளின் சுருக்கமான அட்டவணை:—

(1) ''மதரஸயே தாஜிய்யா'' இது தாஜுல் முல்க் அவர்களால்
ஹிஜ்ரீ 482-ல் அமைக்கப்பட்டது. இதற்கு இமாம் ''அபூபக்கர்
ஷாஷீ,'' என்னும் மகான் தலைமை ஆசிரியராக நியமிக்கப்பட்டிருந்
தார்கள்.

(2) ''மதரஸயே முஸ்தௌபிய்யா'' இது, ஹிஜ்ரீ 494-ல் 'ஷர்
புல்முல்க் அபூஸஃத் மஹ்மூது இபுனு மன்ஸூர்' அவர்களால் கட்டப்
பட்டதாகும்.

(3) ''மதரஸயே 'கமாலியா'' இது, ஹிஜ்ரீ 535-ல் ''கமா
லுத்தீன் அபுல் புதூஹ்'' அவர்களால் கட்டப்பட்டது. இதன்
திறப்பு விழாவில், பக்தாத்நகரின் எல்லா முக்கியஸ்தர்களும் சம்பந்
தப்பட்டிருந்தனர்.

(4) ''மதரஸயே ''அபுல்முஜப்பர்'' இது ஹிஜ்ரீ 544-ல் ''அபுல்
ஜப்பர் ஔனுத்தீ''னவர்களால் கட்டப்பட்டது.

(5) ''மதரஸயே ''திக்கதுத்தௌலா'' இது ''அலிய்யிபுனு
முஹம்மத் மஃரூபு பிஹீ திக்கதுத்தௌலா'' அவர்களால் கட்டப்பட்
டது. இது ஷாபியீ காரர்களுக்கு மட்டும் பிரத்தியேகமாக விருந்தது.

(6) ''மதரஸயே ''பஹாயிய்யா'' இது நிஜாமிய்யாவைச்சார்ந்
தாற்போலிருந்தது. அபூமன்ஸூர் முஹம்மத் ஹரவீ'' என்னும் மகா
னின் சரிதையை வாசித்தால் அவர்களின் உயர்வு புலப்படும். இப்
பெரும் மகான் ''மதரஸயெ பஹாயிய்யா''வின் ஆசிரியராக அமர்த்



தப்பட்டிருந்தார்கள். இம்மகான் மதரஸயெ நிஜாமிய்யாவிலும் உப
தேசஞ்செய்து கொண்டிருந்தார்கள்.

(7) ''மதரஸயே பக்ரிய்யா'', இது, பக்ருத்தௌலா அவர்களால்
ஏற்படுத்தப்பட்டதாகும்.

(8) ''மதரஸயே வாலிதா நாஸிருத்தீநுல்லாஹ்''வானது கலீபா
நாஸிருத்தீன் நுல்லாஹ் அவர்களின் தாயாரால் கட்டப்பட்டது.

(9) ''முஸ்தன்ஸரிய்யா'' வென்னும் பெரிய கலாசாலையானது,
கலீபா முஸ்தன்ஸர்பில்லாஹ் அவர்களால் கட்டப்பட்டது. இக்கலா
சாலையின் வரலாற்றைச்சிறிது விரித்தெழுதுகிறோம். மேற்குறிப்
பிட்ட காலசாலைகளைத் தவிர, பக்தாத் நகரில் ''மஷ்ஹதே அபீஹ
னீபா, வக்பிய்யா, ஸைரகிய்யா, முஐனிய்யா, இஞயிய்யா, மதர
ஸயே கதீமா அப்பாஸியா, முதலிய கலாசாலைகள் அதிபிரசித்தியுள்ள
னவாயிருந்தன. அக்கலாசாலைகளின் ஆசிரியர்களாக இருந்தவர்களின்
வரலாறுகள் தபகாத்துல், ஹனபிய்யா முதலிய கிரந்தங்களின் மூல
மாய் அறியலாம்.

பக்தாத் நகரம் க்ஷீண திசைக்குட்பட்ட பின்னரும் அந்நகரைச்
சார்ந்த கலாசாலைகளுள் பல நிலைத்திருந்தன. மேற்கூறப்பட்டிருக்
கும் கலாசாலைகளில் எதுவும் அப்பாஸியா வகுப்பைச் சார்ந்த கலீபாக்
களின் பெயரால் ஏற்பட்டிருக்கவில்லை. இஸ்லாமிய கிலாபத்துக்குத்
தலை நகராகவிருந்த 'பக்தாத்' பட்டினமானது, அப்பாஸியா வகுப்பல்
லாத இதர வகுப்புகளைச் சார்ந்த பெரியோர்களையே கல்வி யபிவிருத்
தியின் பொருட்டுக் கொண்டாட வேண்டியதாக விருந்தது. இது அப்
பாஸியாவின் சரித்திரத்தில் பெரும் குறைவாக விருந்தது. ஆகவே,
ஹிஜ்ரீ 623-வது ஆண்டில் கிலாபத்துப் பதவியை யடைந்த அல்முஸ்
தன்ஸர் பில்லாஹ் என்னும் கலீபா அவர்கள், இக்குறையை யகற்ற
வேண்டுமெனக் கருதி ஒருபெரும் கலாசாலையை அமைத்தார்கள்.
நீண்ட காலத்துக்குறையை யகற்றும்பொருட்டு அதற்கேற்ற சிறப்
பான முறையிலேயே அக்கலாசாலை அமைக்கப்பட்டது. ''சென்ற
காலத்திலும், நிகழ்காலத்திலும், இத்தகைய உயர்தரமான கலா
சாலை யமைக்கப்படவேயில்லை'' என்று ஏகமனதாய் உலகம் ஒப்புக்
கொண்டிருக்கிறது. ''தஜ்லா'' வென்னும் நதிக்கரையில் ஹிஜ்ரீ 625
வது ஆண்டில் இக்கலாசாலைக்கு அஸ்திவாரக்கல் நாட்டப்பட்டு 6வரு
டம் வரை இடைவிடாது தொடர்ச்சியாய் வேலை நடைபெற்று, கட்ட
டம் பூர்த்தியாயிற்று. இக்கட்டடத்தின் ஒருபாகம், தஜ்லா நதியின்
மேல் கட்டப்பட்டிருந்தது. ஈரான் தேசத்து அரசராகிய ''நாஸி
ருத்தீன்''என்பவர், தம்''ஏஷியா தேச சஞ்சாரநூ''லில்அக்கலாசாலை

யின் முற்காலத்துக் கீர்த்தியை ஞாபகம் மூட்டக்கூடிய தகர்ந்து
கிடக்கும் கட்டட வரலாற்றை வரைந்துள்ளார். ("முஸ்தன்ஸர் பில்
லாஹ்'' வின் ஞாபகார்த்தத்துக்குரிய சின்னம் இன்னமும் இருந்து
வருகிறது என்று கூறுவோம்.)

கட்டடம் பூர்த்தியான ஆண்டு ரஜப்மாதம்கலாசாலையின் திறப்பு
விழா அதிகீர்த்தியோடு நடந்தேறியது. பக்தாத்நகரிலுள்ள எல்லா
உத்தியோ கஸ்தர்களும், சேனாதிபதிகளும், உலமாக்களும், ஆசிரியர்
களும், நியாயாதிபதிகளும், நிர்வாகிகளும், இதர உத்தியோகஸ்
தர்களும், பெரியார்களும் அத்திறப்புவிழாவில் சமுகம் கொடுத்
திருந்தனர். கலீபாமுஸ்தன்ஸர் அவர்கள் உத்தியோகஸ்தர்களுக்
கும், அமீர்களுக்கும், பற்பல சன்மானங்கள் அளித்தார்கள். கலா
சாலையின் கட்டட வேலையைப் பொறுப் பேற்று, முதன்மை
யாகவிருந்து கட்டிமுடித்த "முஜயித்தீன் அல்கமீ'' அவர்களுக்
குப் பலமானியங்களை யளித்தார்கள். நான்கு மதஹபுகளைச் சார்
ந்த புகஹாக்களையும், ஷைகுல் ஹதீதுகளையும், ஷைகுன் நஹவு
களையும், ஷைகுல் பராயில்களையும், ஷைகுத் 'திப்களையும், அக்
கலாசாலைக்கு ஆசிரியர்களாக நியமித்தார்கள். கலாசாலையின் உப
யோகத்துக்காக, அரசாங்க புத்தக சாலையினின்றும் நல்ல அரிய
புத்தகங்கள் 160 ஒட்டகைகளின் மேலேற்றிக் கொண்டுவரப்பட்
டன. கலாசாலையின் எல்லைக் குள்ளேயே ஓர் ஆஸ்பத்திரியும்,
ஜலத்தைக் குளிரச் செய்யும் கருவியுமிருந்தன. மதரஸாவின் திற
ப்புவிழாவன்றே 248, மாணவர்கள் கலாசாலையின் விடுதியில் (Board-
ing) தாக்கலானார்கள். அக்கலாசாலையிற்றங்கி கல்வி கற்போர்க்கு
இடம், விரிப்பு, உணவு, எண்ணெய், கடிதம், எழுதுகோல், முத
லியவைகள் இலவசமாகக் கொடுக்கப்பட்டுவந்தன. சாதாரண உண
வல்லாமல், அம்மாணவர்கட்கு கனிவர்க்கங்களும், தித்திப்புப்
பதார்த்தங்களும், மாதம் ஒன்றுக்கு "ஒரு பவுன்'' வீதம் உபகாரச்
சம்பளமும் அளிக்கப்பட்டன. கலாசாலையின் செலவுக்காக எண்
ணிறந்த கிராமங்கள் மானியம் விடப்பட்டிருந்தன. அவை
களிலிருந்து வரக்கூடிய வருமானம் சுமார் 4¼ லக்ஷம் நாணயங்களா
கும். "அல்லாமா ஜஹீ'' என்பவர்கள் "இஸ்லாமிய வல்லரசுகள்''
என்னும் சரித்திரத்தில் கலாசாலைக்கு மானியம் விடப்பட்டிருந்த
கிராமங்களின்அட்டவணையைச் சேர்த்திருக்கிறார்கள். "ஷைக் உமர்
முலக்கப்பிஹீ ரஷீதுத்தீன் பர்கானி'' அவர்கள் ஹனபீ மாணவர்க
ளின் தலைமை ஆசிரியராகவிருந்தார்கள். ஷைக் அவர்கள், பிக்ஹ்,
உசூல், ஹிக்மத், கலாம் ஆகியவைகளில் பெரும் நிபுணரென்பது



பிரசித்தம். 'முஸ்தன்ஸரிய்யா' வென்னும் கலாசாலையின் வாசலைச்
சார்ந்த கட்டடத்தில் விலையுயர்ந்த ஆச்சரியமான ஒரு கடியாரம்
வைக்கப்பட்டிருந்தது.

(இக்கடியாரம், அப்பாஸியா ஆட்சியில் உண்டுபண்ணிய கடியாரங்களுள்
இரண்டாவதாக விருக்கலாம். முதலாவது கடியாரமானது, கலீபா ஹாரூன்
ரஷீத் அவர்களால் ப்ரான்ஸ் தேச அரசருக்கு அனுப்பப்பட்ட கடியாரமெனக்
கருதப்படுகின்றது. அது ஐரோப்பாவில் அதி ஆச்சரியத்தை யுண்டுபண்
ணிற்று. ப்ரான்ஸ் தேசத்தின் பிரஸித்திபெற்ற சரித்திர ஆசிரியர்
கள், "ஹாரூன்ரஷீத் அவர்களால் ப்ரான்ஸ் அரசருக்குச் சன்மானமாக
அனுப்பப்பட்ட கடியாரமே, எங்கள் நாட்டிற்கு முதலாவது கடியாரமாகத்
தோன்றிற்று'' என்று வரைந்திருக்கின்றார்கள். அக்கடியாரமானது பெரும்
ஆச்சரியத்தை யுண்டுபண்ணக்கூடியதாக விருந்தது. அரசாங்க தர்பாரிலுள்
ளோர் இக்கடியாரத்தைக்கண்டு பிரமித்துப் போனார்கள். அக்கடியாரத்தில்
12 வாசல்களிருந்தன. ஒரு மணி ஆனதும், ஒரு வாயில் தானாகவே திறந்து
கொள்ளும். செம்பினால் செய்யப்பட்ட ரவையொன்று எஃகு தகட்டில்
விழும். (இவ்வாறு திறந்துகொண்ட வாயில், திறந்தே யிருக்கும். 12 வாயில்
களும், 12 மணி ஆனதும் திறந்துகொள்ளும்.) என்று "கஷ்புல் முகப்பா அன்
புறுன் ஓரியா'' 218, 219 பக்கங்களில் வரையப்பட்டிருக்கின்றன.)

இக்கடியாரம். "அலிய்யிபுனு தக்லப்பின் அபில்லியாபஹ்
லெபக்கீ'' என்னும் பிரசித்திபெற்ற சாஸ்திர நிபுணர் செய்ததாகும்.
பின்னர், அவர் "கடியாரம் செய்வோர்'' என்னும் நாமத்தோடு பிர
சித்தமெய்தியிருந்தார். "முஹக்கிக்தூசி'' என்னும் மகானின் சிஷ்ய
ரான "அப்துர் ரஜாக் இபுனு கௌத்தீ'' என்பவர் தன்குருவோடு
10 வருடம்வரை பண்டகசாலையின் அதிபதியாயிருந்தார். தாத்
தாரிகளின் சம்பவத்துக்குப் பின்னர், இவர் புத்தகச்சாலையின்
அதிபதியாகவிருந்து 50 வால்யூம்களைக்கொண்ட ஒரு சரித்திர புத்த
கத்தை இயற்றினார்.

நாம் மேற்கூறியவாறு 6-வது நூற்றாண்டில் இஸ்லாமைச்
சார்ந்த எப்பாகமும் கல்விச் சின்னங்களை விட்டுக் காலியாக விருக்க
வில்லை. 6-வது நூற்றாண்டுவரை இத்தகைய கலாசாலைகள் ஏற்படா
திருந்த அரேபியா, எகிப்து, முதலிய நாடுகளிலும், பள்ளிக்கூடங்
கள், கலாசாலைகள், ஆகிய கல்வி ஸ்தாபனங்கள் நிறைந்துபோயின.
"எஹிப்தில் கலீபா உபைதீ ஹாக்கிம் பி அம்ரில்லாஹ் அவர்கள்
ஹிஜ்ரீ 4-வது நூற்றாண்டில் ஸ்தாபித்த "தாருல் இல்மு'' என்
னும் கலாசாலையை ஹிஜ்ரீ 403-ல் அவரே அழித்து விட்டார்.
இச்சம்பவம் முதற்கொண்டு எகிப்தில் எவரும் கல்வியபிவிருத்
திக்குரிய காரியத்தைச் செய்ய முன்வரவில்லை. ''நூரிய்யாவும்''

''ஸலாஹிய்யா''வும் 6-வது நூற்றூண்டில் இஸ்லாமிய உயர்வுக்கும்,
கீர்த்திக்கும் பிரதானமானவையாகவிருந்தன. ஹிஜ்ரீ 541-வது
ஆண்டில் பட்டஞ் சூட்டப்பட்ட நூருத்தீன் மஹ்மூது ஜங்கி''
என்பவர் நூரிய்யாவெனும் ஆட்சியின் ஸ்தாபகரும், எகிப்து, ஷாம்
ஆகிய தேசங்களின் ஸ்திரமான அரசராயுமிருந்தார்.

மேல் நாட்டுக்கொள்ளைக் காரர்களால் அபகரிக்கப்பட்டிருந்த
கோட்டை, நகரம் ஆகியவைகளில்சுமார் 50-வரை இவர் மீண்டும்
கைப்பற்றிக்கொண்டார். ''ஸலாஹுத்தீன்'' என்பவர் நூருத்தீனின்
ஆதரவில் கல்விபயின்றவராயினும் சிலுவையுத்தங்களும் (crusades)
பைத்துல் முகத்தஸின் வெற்றியும், ஸலாஹுத்தீனுக்கு நூருத்தீனைக்
காட்டினும் அதிகீர்த்தியையும், மேன்மையையும் அளித்தன. முஸ்
லிம்களின் மறந்துபோன கீர்த்தியை மேல்நாட்டாருக்கு மற்
றொருமுறை ஞாபகம் மூட்டிய அரும்தீரமும், எகிப்து,
ஷாம், ஆகியநாடுகளில், கல்விப்பிரகாசத்தை ஜ்வலிக்கச்செய்தசேவை
யும் இவ்விருகுடும்பத்தினருக்கு விசேஷகீர்த்தியை யளித்தன.

நூருத்தீன் என்பவர் ஹலப், ஹமாத், ஹிம்மஸ், பஃலபக்,
மப்னஜ், ரஹ்பா, முதலிய நடுகளில் பெரும் பெரும் கலாசாலைகளை
ஏற்படுத்தினர். நூருத்தீனுக்குத் தலைநகராக விருந்த 'மஸ்கஸ்', என்
னும் நகரில் ஒரு பெரும் கலாசாலையை யேற்படுத்தினர். அக்கலா
சாலையானது நீண்ட காலம் வரை நிகரற்றதென விளங்கியது. முழு
உலகிலும் முதன் முதலாக ஏற்பட்ட தாருல் ஹதீது, நூருத்தீனின்
நாமத்தைக் கொண்டிருந்தது. இதற்கு முன்னர், ஹதீதுஷரீபைக்
கற்பிப்பதற்காக மட்டும் பிரத்தியேகமாய் ஒரு மதரஸாவேனும் ஏற்
படுத்தப் படவில்லை. ஆகவே, இக்கீர்த்தியும், நூருத்தீனுக்கே உரிய
தாகும். அல்லாமா இபுனு ஜுபைர் அவர்கள் ஹிஜ்ரீ 578-ல் தம
மஸ்கஸ் நகரைக் கண்ணுற்றபோது அந் நகரில் மட்டும் 20 காலேஜ்
களிருந்தன. '' எவரேனும் காலேஜை ஸ்தாபித்தால் அதன் செலவு
முழுவதும் அரசாங்க பொக்கிஷத்திலிருந்தே யளிக்கப்படும்'' என்
னும் கட்டளையும் பிறப்பிக்கப்பட்டிருந்தது. மேல் நாட்டு மாணவர்
களுக்காகமட்டும், பிரத்தியேகமாய் 7 தோட்டங்களும், சில பூமிகளு
களும் விடப்பட்டிருந்தன. இவைகளின் வருடாந்தர வருமானம்
500, தங்கநாணயங்களாகும். குர்ஆன் ஷரீபுமுழுவதையும் படிக்கமுடி
யாத மாணவர்களுக்கு ''கௌஸர்'' என்னும் ஸூராவரை கற்பிக்கப்
பட்டு வந்தது. இத்தகைய மாணவர்களுள் 500 மாணவர்களுக்கு
அரசாங்க பொக்கிஷத்திலிருந்து உபகாரச்சம்பளம்கொடுக்கப் பட்டு
வந்தது. '' நூருத்தீன்,'' தன் சொந்தசொத்திலிருந்து கல்விச்சாலை



கட்கு விட்டிருந்த சொத்துகள் அவர் மரணமடைந்த பின்ன
ரும் அநேக வருடங்கள் வரை ஸ்திரமாக விருந்து வந்தன. அச்
சொத்துக்களின் வருமானம் 9, 000 சூரிய்யா தங்க நாணயங்களாகும்.

அவ்வண்ணமே, சுல்தான் ஸலாஹுத்தீன் அவர்களும், இஸ்கந்
திரியா, காஹிரா, பைத்துல் முகத்தஸ் திம்ஷக் முதலிய நாடுகளில் கல்
விச் சாலைகளை ஸ்தாபித்துஅளவற்றவருமானங்களைஅவைகட்கு மானி
யம் விட்டிருந்தார்கள். '' இஸ்கந் திரியாவில் கல்வி கற்கும் பொருட்டு
வரும் மாணவர்கட்குஇருக்க இடம்,உண்ண உணவு,முதலியசகலசௌ
கர்யங்களும் செய்து கொடுக்கப்படு'' மென்று அறிக்கையிடப் பட்டி
ருந்ததாக அல்லாமா இபுனு ஜுபைரவர்கள் வரைந்திருக்கின்றூர்கள்.
சுல்தான் ஸலாஹுத் தீன் அவர்கள் காலத்தில் உலமாக்களுக்குக்
கொடுக்கப் பட்டு வந்த சம்பளம் 3 லக்ஷம் தீனூராகும். இன்றைய
கணக்குப்படி 3 லக்ஷதீனூரும் 15 லக்ஷம் ரூபாயாகும்.

சுல்தான் ஸலாஹுத்தீனின் குடும்பத்தைச் சார்ந்த எல்லோ
ரும் கல்வியபிவிருத்திக்குரிய காரியத்தைப் புரிவதில் சிறந்து விளங்
கினூர்கள். அமீர்கள், உத்தியோகஸ்தர்கள், அக்குடும்பத்தைச்
சேர்ந்த மாதர்கள் முதலிய சகல ரிடத்தும் கல்விப்பற்று நிலவியிருந்
தது. கல்வியபிவிருத்திக்குரிய சின்னங்களை ஏற்படுத்தாது மரண
மடைந்து போவோரை அதி இழியவரென்று கருதப்பட்டு வந்தது.
சுல்தான் ஸலாஹுத்தீனவர்களின் கீர்த்திவாய்ந்த புத்திரரான'' அல்
மலிக்குல்லாஹிர் அபுல்பத்ஹ்காஜீ'' அவர்கள் ஹலப்தேசத்தின் அதி
பதியா யிருந்தகாலை, மதரஸயெநிஜாமியாவின் உதவியா சிரியராக
விருந்த அதிகீர்த்தி வாய்ந்த பஹாவுத்தீன் என்னும் மகான் மலிக்
குல்லாஹிரைத்தரிசித்தார்கள். அவ்வமயம் ஹலப்தேசத்தில் சில
கல்விச்சாலைகளிருந்தன. ஆனூல், பஹாவுத்தீன் அவர்கள் அக்கல்
விச்சாலைகள் மட்டும் போதாதெனக் கூறிக் கல்விச்சாலைகளை யேற்
படுத்துவதைச் சார்ந்த செலவுக்காக அநேகமானியங்களை 'மலிக்குல்
லாஹிர்' விடும்படிசெய்தார்கள். பஹாவுத்தீன் அவர்களும், ஷாபி
யிய்யா, 'தாருல்ஹதீது' ஆகிய இரண்டு கல்விச் சாலைகளை யேற்படுத்
தினூர்கள். ஆகவே, ஹலப்தேசமானது கல்விப் பிரகாசத்தால் ஜ்வ
லித்தது. தூரதேசங்களிலிருந்து கல்வி யறிவில் தேர்ச்சியுள்ள
மகான்கள் ஹலப்தேசத்துக்கு வர ஆரம்பித்தனர். சொற்பகாலத்
துக்குள்ளேயே ஹலப்தேசமும், தமஸ்கஸ், எஹிப்து ஆகிய தேசங்
களைப் போலவே கல்விக்குப் பிரதானதேசமாயிற்று. மிஸர், காஹிரா,
தமஸ்கஸ், ஹலப், அர்பல் முதலிய நாடுகளில், அமைக்கப் பெற்ற
எண்ணிறந்த கல்விச்சாலைகளைக் கணக்கிட்டுக் கூறஎவரால் ஸாத்திய

மாகும்? எவரேனும் விரும்பின், அக்கல்விச்சாலைகள் சம்பந்தமாய்
இயற்றப்பட்டிருக்கும் சரிதைகளைக் கண்ணுற்று ஒரு பெரிய அட்ட
வணையைத்தயாரிக்கலாம்.

---

# ரஹ்மதுல் லில் ஆலமீன்

நமது நபிகள்பிரான் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்
லம் அவர்களுக்கு அநேக திருநாமங்களுண்டும். ஆனால், அவைகள்
யாவற்றினும் " ரஹ்மதுல்லில் ஆலமீன் " (இருலோக ரக்ஷகர்) என்
னும் பெயரே பரிசுத்த அல்லாஹு தஆலாவிற்கு அதிவிசேஷ பிரியத்
தையுடையதென்று தெரிகிறது. ஏனெனில், அத்திரு நாமத்தில்
"இருலோகத்தின் எல்லா ஜீவஜந்துக்களிடத்தும் கருணை, நட்பு,
தயாளம் ஆகியவைகளையுடையவர்கள்" என்ற பொருள்கள் பொதிந்து
இருக்கின்றன. உண்மையில் கருணை, நட்பு, தயாளம் முதலிய நற்
குணங்கள் அந்நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்
அவர்களின்சொற்செயல்ஆகியவைகளில்முழிப்பிலும்,நித்திரையிலும்
ஒவ்வொரு நிமிடமும் வெளியாகிக் கொண்டிருந்தன வென்பது நாம்
ஆராய்வோமாயின் தட்டனத் துலங்கும். அவர்களின் பொருட்டால்
அல்லாஹு தஆலா தன்னடியார்களுக்கும்,மற்றும் ஜீவப்பிராணிகளுக்
கும் அளித்திருக்கும் தயாளம், வெகுமதி ஆகியவைகள் வேறு எந்ந
பிமார்களின் பொருட்டினாலும் அளிக்கவில்லை என்பது திண்ணம். நம
சுத்தசத்திய இஸ்லாம் மார்க்கம் உலகிற் தோன்றுமுன் மாந்தர்கள்
வழிகேடு, இழிவு, எல்லாவித துர்க்கிருத்தியம் ஆகியவைகளில் சிக்
குண்டிருந்தனர். அவர்களிடத்து இணைவைத்தலும், குபுரும் குடி
கொண்டிருந்தன. சாராயம், கள்ளு ஆகியவைகளையுண்ணல், சிறுமி
களையுயிரோடு புதைத்தல் போன்ற காரியங்கள் அவர்களிடமிருந்தன.
காளைமாடு, வானரம், பாம்பு, முதலானவைகளை அக்காலத்து மக்கட்
கள் கடவுளென பூஜித்துவந்தனர். சூதுவிளையாடல், இரத்தஞ்
சிந்துவது, பெண்கள்பேரில் நியாயமற்ற காரியங்களைச் செய்தல்,
அப்பெண்கள் விவாகமாகுமளவும் பெற்றோரின் செல்வமாகவும்,
விவாகத்தின் பின் புருடனின் ஆஸ்தியாகவும் கொள்ளப்பட்ட
னர். அடிமைவியாபாரம் எங்கும் பரவியிருந்தன. அடிமைகள்



பேரில் விதவிதமான கஷ்டநிஷ்டூரங்களைச் செய்து, மனிதர் மனிதர்
களின் பகைவர்களாகவிருந்தனர். துர்க்கிருத்தியங்களை விலக்கக்கூடிய
வர் யெவருமிலர். பிற்காலத்தில் நலவையேவி, கெடுதியை விலக்கி,
நற்குணத்தைக் கற்பிக்கும் தன்மையுடைய அநேகர்கள் மேற்கூறிய
துர்ச்செய்கைகளில் அதிகமாய் ஈடுபட்டிருந்தனர். மார்க்கத்தின் பெய
ரைக்கொண்டு கருணையற்ற காரியங்களைப் புரிந்தனர். ஆண்டவனின்
பெயரைக்கொண்டு மனிதர்களைப் பலியிட்டனர். சௌந்தரவதியாகிய
இளம் வாலிபப்பெண்களைக் கடலில் தாழ்த்தியோ, அல்லது தீயி
லிட்டு யெரித்தோ நாஸமாக்கினர். துராக்கிருதமான காரியங்களை
யுடைய அவர்கள் உலகில் துஷ்டமிருகங்களைப் பார்க்கிலும், அதிக
துஷ்டர்களாக விருந்தனர். அனால், நமது நாயகம் ரஸூலகரீம்
முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் துஷ்டநிக்ரஹ
பரிபாலனக் கர்த்தாவாக வெளிப்போந்தனர். ஆகவே, மேற்கூறிய
மனிதவர்க்கத்தின் காரியங்களுக்கு முற்றும் முறணான துர்க்கிருத்தி
யங்கள் கொஞ்சங் கொஞ்சமாய் சூரியனைக்கண்ட பனிபோல் மறைய
வாரம்பித்தது.

யாவற்றிலும் முதன்மையாக நாயகம் முஹம்மது ஸல்லல்
லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருமக்கமா நகரில், இஸ்லாத்
தைப் பிரசாரஞ்செய்து, ஓர் சிறிய கூட்டத்தினரைத்தயார்செய்து
கொண்டனர். சொற்ப நபர்களைக்கொண்ட அச்சிறு கூட்டத்தினர்
யாரிடத்தும் ஆதரவற்று, மற்றவர்களுக்கு கஷ்டநிஷ்டூரங்களைச்
செய்வதையொழித்து, மற்றோர்களின் துர்க்கிருத்தியங்களின் நிமித்
தம் அடையும் கஷ்டங்களை சகித்தவர்களாய் எப்போழ்தும் அல்லா
ஹுத ஆலாவைத் தொழுபவர்களாக விருந்தனர். அவர்கள் மது
உண்ணல், சூதாடல்போன்ற காரியங்களை விட்டுவிட்டனர். அவர்கள்
தங்கள் விரோதிகள் செய்யும் துர்ச்செய்கைகளைக் கண்ணுற்று,
அதற்கு மாற்றமாய் நலவானகாரியங்களைக் கைக்கொண்டு நற்குண
சாலிகளாயினர். ஆனால், விரோதிகளின் கொடுமைகள் நாளுக்கு
நாள் அதிகரித்துவந்த தன் நிமித்தம், நாயகம் முஹம்மது ஸல்லல்
லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருமதினமா நகருக்கு எழுந்
தருளினார்கள். அவ்விடத்தில் இஸ்லாமுக்கு அபிவிருத்தியேற்பட்டு,
முழு அரேபியாவிலும் இஸ்லாம் பரவலுற்றது. ஹஜ்ரத் நாயகம்
ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களின் பரிசுத்த
ஜீவியகாலத்திலேயே உலகின் எல்லாபெரிய இராஜாக்களுக்கும்
" இஸ்லாம் மார்க்கத்தில் சேர்ந்து கொள்ளும்படியாய் " கடிதம்
எழுதினார்கள். ஆகவே, அவர்களிற் சிலர் இஸ்லாமைத் தழுவினார்கள்.

இவ்விதமே நாயகம் அவர்கள் தங்களின் கருணை, கிருபை, தயாளம்
ஆகியவைகளை யுலகமுழுவதிலும் பரவச்செய்து, “ரஹ்மதுல்லில்
ஆலமீன்” என்னும் திருநாமத்தின் உண்மை குணத்தை யுலகிற்கு
காரியத்தில் காட்டிவிட்டார்கள்.

ஹஜ்ரத் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்
களின் பொருட்டால், அல்லாஹுதஆலா தன்னடிமைகளுக்கு இறக்
கியரஹ்மத்தை நாம் எண்ணி முடியாது. ஆனால், நாம் சிலதைப்பற்றி
கூறுகிறோம். அதைக்கொண்டு நோக்குங்கால் அக்கிருபைகள் யாவும்
நன்குபுலனாகும். அவர்களின் பொருட்டால் உயர்ப்பதவியையடைந்த
வர்களில் (1) பெண்கள், (2) சிசுக்கள், (3) அடிமைகள், (4) ஏழை
ஜனங்கள், (5) கீழ்சாதியினர், (6) ஜீவஜந்துக்கள், (7) தாவரவர்க்கம்
ஆகியவைகளாகும். உலக சிருஷ்டிகளில் மேற்கூறிய ஏழுவகையினர்
கள் பெருங்கஷ்டத்திற்கும், அநீதத்திற்கும் ஆளாகியிருந்தனர்.
அவர்களுக்கு உலகம் நரகமாகவிருந்தது. நம்பரிசுத்த இஸ்லாம்
வெளியாகு முன் பெண்கள் எவ்வளவு அநியாயத்திற்காளாக்கப்பட்டி
ருந்தனர், என்பதன் விஷயங்களை நீங்கள் பலதடவைகளில் கேட்டி
ருப்பீர்கள். ஆனால், அதைப்பற்றி சுருக்கமாய் நாம் வரைகின்றோம்.
இஸ்லாம் மார்க்கம் உலகிற்தோன்று முன், பெண்கள் விலையில்லாமல்
கிடைத்த அடிமையாகவும், இலவசமான கூலியாகவும் நடத்தப்
பட்டனர். அவர்கள் சுயமாக வியாபாரஞ்செய்யவும் (அவளே கல்லா
வீற்று வியாபாரஞ்செய்வதல்ல. ஆனால், முதல்வைத்து, ஆள்மாகா
ணங்களை யேற்படுத்தி, அவர்கள் மூலமாய் வியாபாரஞ்செய்வது.)
பொருள் சம்பாதிக்கவும், தன் சொத்துகளை அதாவது :—தன் தகப்
பனாலேயோ, புருடனாலேயோ அளிக்கப்படும் நகை, புடவை ஆகிய
வைகளை அவள் தன் இஷ்டம்போல் செலவு செய்துக் கொள்ள யுரிமை
கிடையாது. அவளின் சொத்துகள் யாவும், அவள் புருடனின் சொத்
தாகும். அதையவனே விற்கவும், கிரயஞ்செய்யவும் முடியும். (இன்
றைக்கும் ஐரோப்பிய மாதுகள் தங்களின் சொத்துகளை அவளின்
புருடனன்றி விற்கமுடியா ) “புருடனிறந்தபோழ்து, அவளை யவ
னோடு யெரித்துவிடவேண்டும்” என ஹிந்து மார்க்கம் ஆக்ஞாபிக்கி
றது. அதன் படி நடந்துவந்த ஹிந்துக்களை அக்பர்பாஷா குறுக்
கிட்டு “உடன் கட்டையேறுவதை தடுத்திருக்காவிட்டால்,
இன்று இந்தியாவில் வியபசாரத் தொழில் நடத்தும் ஹிந்துவிதவை
கள் பெருகியிருக்கார்கள்.” ஹிந்துமார்க்கத்தில்] ஏற்பட்டிருந்த ஓர்
(உயிருடனிருக்கும் பாவமற்ற பெண்மணி, இறந்த தன் கணவனோடு
தீயில் வேகவேண்டுமென்னும்) கொடியவழக்கத்தை, ஒரு முஸ்லிம்



அரசர் தடுத்து அப்பெண்மணிகளுக்கு உயிர்ப்பிச்சையளிக்கச் செய்
தது, நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்
அவர்கள் பொருட்டால் கிடைத்த இஸ்லாம் மார்க்கமளித்த சுயேச்
சையென்பது மிகையாகாது. தன்புருடனை மரணத்திற்கு பறிகொடுத்
தவள், மறுவிவாகம் செய்துகொள்ள வியலாது, தன்வாழ்நாள்
முழுவதையும் மறுவிவாக மில்லாமலேயே கழிக்கவேண்டும். அவளால்
உலகவிருத்தியாம்சங்களில் அநேகசந்ததியார்கள் தோன்றாமல் போய்
விடுகின்றனர். மறுவிவாகம் செய்துகொள்ள ஹிந்துமார்க்கம் உத்
திரவளிக்காததன் நிமித்தம் அவள் வியபசாரத்தை கொஞ்சமும்
நாணமற்றவளாய் கைக்கொள்ளுகின்றாள். இஸ்லாம் மார்க்கம் புரு
டனை இழந்தவள் மறுவிவாகஞ் செய்துகொள்ள உத்திரவளித்திருப்
பதைக் கற்றுக்கொண்ட தயானந்தர், ஹிந்து மார்க்கத்திற்கும்,
இஸ்லாம் மார்க்கத்திற்கும் முறணான ஓர் போலிமார்க்கத்தை சிருஷ்
டித்து, அதில் கணவனற்றவள் “புணர்விவாகம்” செய்துகொள்ள
லாம் என்று ஏற்படுத்தியிருக்கின்றார். இஸ்லாம் மார்க்கத்தின்
சட்டதிட்டங்களிலோ முதல்விவாகத்திற்கும், அதனால் ஏற்படும்
சந்ததிகளுக்கும் எவ்வளவு கண்ணியமும், சுதந்தரத்தையும் ஏற்
படுத்தியிருக்கின்றதுவோ? அதே கண்ணியமும் சுதந்தரமும் மறு
விவாகத்திற்கும், அதனால் ஏற்படும் சந்ததியார்களுக்கும் ஏற்
படுத்தியிருக்கின்றது. தயானந்தரோ தான் சிருஷ்டித்த புதிய
மார்க்கத்தில் மறுவிவாகத்திற்கு “புணர்ச்சிக்காக” செய்யப்படும்
விவாகமென இழிவானப்பெயரைச் சூட்டியிருக்கின்றார். அந்த
மறுவிவாகத்தினால் உற்பத்தியாகும் சந்ததியார்களுக்கு புரு
டனின் சொத்திலிருந்து பாகம் கிடைப்பதற்கு சட்டமில்லை. இப்
படிப்பட்ட போலிமார்க்கத்தின் புத்தகத்திற்கு தங்கள் மார்க்கமே
இன்னதென்று தெரியாத சில ஹிந்துகள் மதிப்புரையளித்திருப்பது
ஆச்சரியமல்ல. ஏனெனில், அவர்கள் உண்மையான ஹிந்துகளாயின்
தங்கள் ஹிந்துமார்க்கத்தை தாக்கக்கூடிய சொற்களைப் பொதிந்த
தோர் புத்தகத்திற்கு எங்ஙனம் மதிப்புரையளிப்பார்கள்? கேவலம்
4. ரூபாய்கள் பெரும் ஓர் புத்தகத்தைக் கொடுத்துவிட்டால் போதும்,
அப்புத்தகம் தங்கள் மார்க்கத்தை தாக்கியிழிவுபடுத்தினாலுஞ் சரி,
அல்லது வேறுமார்க்கத்தைத் தாக்கி, தேயத்தில் குழப்பத்தையுண்
டாக்கினாலுஞ்சரி அதற்கு மதிப்புரை எழுதுவதுதான் தங்களின்
கடமை என எண்ணிக்கொண்டனர். ஹிந்துமார்க்கத்திலோ மாதர்
களுக்கு அவர்களின் தகப்பன், புருடன், மகன், சகோதரன் ஆகிய
வர்களின் சொத்திலிருந்து பாகம்பெற சுதந்தரமில்லை. இந்நிலைமை

யில் "ஹிந்துமார்க்கத்திலுள்ளவர்களெ" னபெயரளவில் கூறிக்கொள்
ளுபவர்கள், "இஸ்லாம் மார்க்கத்தின் சட்டப்படி பெண்கள் கோஷா
விருக்கவேண்டியதை" யடிமைப்படுத்தப் படுகின்றார்கள் எனமொழி
யத் துணிந்ததுவே ஆச்சரியத்தை யுண்டாக்குகின்றது.

நமது நபிகள் பெருமானார் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி
வஸல்லம் அவர்கள் பொருட்டால் அல்லாஹுதஆலா அளித்த நம்
சுத்தசத்திய இஸ்லாம் மார்க்கம் பெண்களுக்கு அநேக சுதந்தரங்
களை யளித்திருக்கின்றது. குர்ஆன்ஷரீபில் பெண்களின் உரிமையைப்
பற்றி கூறியிருப்பதன் சுருக்கமாவது:—

பெண்களும் ஆண்களைப்போல் பதவியில் சமமானவர்களே.
அவர்கள் தங்கள் தகப்பன், புருடன், மகன், சகோதரன் ஆகியவர்
களின் சொத்திலிருந்து பாகம் பெறுவார்கள். தங்களின் சொத்தை
விக்கிரயஞ்செய்யவும், தானந் தர்மங்கள் செய்யவும், வேறு சொத்தை
வாங்கவும் வியாபாரஞ் செய்யவும் அனுமதியளிக் கின்றது. ஆடவர்
கள் செய்யும் நற்காரியத்திற்கு எப்படிப்பட்ட கூலியை ஆடவர்க
ளடைகின்றனரோ? அதேவிதமான கூலியை பெண்களும் அடைவார்
கள். அவர்களும் சுவர்க்கம் புகுவர். அல்லாஹுத ஆலாவின்
சிருஷ்டியில் ஆடவர்கள் எத்தன்மையுடையவர்களாக விருக்கின்
றனரோ? அத்தன்மையைப் பெண்களும் உடையவர்களே. "மூமி
னெ"ன்றும், "முஸ்லிமெ"ன்றும் அழைக்கப்படுவதில் இருபாலர்
களுக்கிடையில் யாதொரு விகற்பமும் கிடையாது.

ஹதீதுஷரீபில் மனைவியுடன் நற்குணத்துடன் இல்லறவாழ்க்
கையை நடத்தவேண்டுமென்று பல ஹதீதுகள் வந்திருக்கின்றன.
மனைவிக்கு தனிவீடோ, அல்லது தனி அறையோ அளிக்கவேண்டும்.
அவைகளில் அவளின் உத்திரவன்றி புருடனின் தாய்க்கூட உட்பிர
வேசிக்க மார்க்கம் உத்திரவளிக்கவில்லை. அவளுக்கு வருடத்திற்கு
இருமுறை பிடவைவாங்கிக் கொடுக்கவேண்டும். காலிற்கு செருப்பு,
எண்ணெய், குளிர்க்காலத்திற்குத் தகுந்த கம்பளி, துப்பட்டி ஆகிய
வைகளை யளிக்கவேண்டும் என கட்டளைச் செய்திருக்கிறது. ஆகவே,
இல்வாழ்க்கை இனிது நடைபெறுவதற்காக புருடன் சக்தியும்,
மனோதிடத்தையுமுடையவனாக விருப்பவனாதலின் கஷ்டப்பட்டு சம்
பாதிக்கின்றான். மனைவியோ தன் குழந்தைகளை நன்றாய்ப் பரிபா
லித்து, அவர்களைக் காப்பாற்றி, குடித்தனமென்ற "துரைத்
தனத்தை" யொழுங்குபெற நடத்துகின்றாள். அவளுக்கு இதைப்
பார்க்கிலும் அதிக சுதந்தரமளிக்கப்படுமாயின், இராஜனுக்கு மேற்
பட்ட அதிகாரத்தை இராணிக்கும், முதல் மந்திரிக்கு மேற்பட்ட



அதிகாரத்தை மற்ற மந்திரிகளுக்கும் அளிப்பதைப்போலாகும். அப்
படிப்பட்ட சுதந்தரத்தினால் இன்று ஐரோப்பாவில் அநேக இல்
லங்களில் சண்டைச்சச்சரவு யுண்டாகி, விவாகரத்துகள் அபரிமிதமாய்
உண்டாகிக்கொண்டிருப்பதுபோல், ஒவ்வொரு வீட்டிலும் எந்நேர
மும் பிணக்கு ஏற்பட்டு விவாகரத்துகளும் உண்டாகிக் கொண்டே
இருக்குமென்பதில்லையமில்லை.

நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்
அவர்கள் பெண்களை அநீதம், கொடுமை ஆகிய கஷ்டநிஷ்டூரங்களி
லிருந்தும் விடுவித்து, ஆடவர்களுக்குரிய எல்லாவித உரிமைகளையும்
பெண்களுக்கும் அளித்துவிட்டார்கள். ஐரோப்பியர்கள் வெளித்
தோற்றத்திற்கு மட்டும் தங்கள் பெண்களிடத்து மரியாதைசெய்
கின்றனர். அவளின் நாயை மடியின்மீது எடுத்துக் கொள்ளுகின்ற
னர். தலைவாயலைத் திறந்து அவள் வரவை எதிர்ப்பார்க்கின்றனர்.
அவள் கைலேஞ்சி கீழே விழுந்துவிடுமாயின் சட்டெனஅதையெடுத்து
அவளுக்கு அளிக்கின்றனர். அவளைக்காணுந்தோறெல்லாம் தங்க
ளின் தொப்பியை தலையிலிருந்து எடுத்து, அவளுக்கு வந்தனம்
செய்வது போன்றவைகளைச் செய்கின்றனர். (இதைக்கண்ட சில
ஹிந்துக்கள் "ஐரோப்பியர்கள் தங்கள் மாதர்களுக்கு சுயேச்சை
யளித்து விட்டதாகக் கூற நாணமடைவதில்லை). ஆனால், பெண்களிடத்
தில் உண்மையாக நற்குணத்தோடு நடந்துக் கொள்ளக் கூடியவைகளி
லிருந்து வெகுதூரம் பின்னடைந்திருக்கின்றார்கள். யாவற்றிலும்
முதன்மையான கிருபை "கோஷா" வாகவிருக்கும். ஏனெனில், பெண்
கள் கோஷா அனுஷ்டிப்பதனால், அவர்களுடைய சங்கையும், மான
மும் கார்க்கப்படுகிறது. நீங்கள் மேல்நாட்டிற்குச் சென்று நோட்ட
மிடுவீர்களாயின் பெண்களின் கண்ணியம் மண்ணில் புதையுண்டு,
இழியநிலைமை யுயிர்ப்பெற்றிருப்பதைக் கண்டு (தற்காலம் நம்மவர்
களிற் சிலர் பெண்கள் கோஷா அனுஷ்டிப்பது சரியல்லவென்று,
அவ்வனுஷ்டானத்தை நீக்கிவிட முயற்சித்துவருகின்றனர். இப்
படிப்பட்டவர்களின் துர்ப்போதனைக்கு நம்மவர்கள் ஆளாகாதிருக்கும்
படி அல்லாஹுதஆலா காப்பாற்றுவானாக!). இந்தியாவில்
கோஷா அனுஷ்டானம் பெண்களை அதியுயர் நிலைமைப்படுத்திவிட்
டது எனப் பகறுவீர்கள். ஆனால், இந்தியாவின் கோஷா அனுஷ்டா
னத்திற்கும், இஸ்லாமிய கோஷா அனுஷ்டானத்திற்கும் இடையில்
வானத்திற்கும் பூமிக்கும் இடையிலுள்ள வித்தியாச மிருக்கிறது.

நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்
சிறுவர்களிடத்தில் அதிநட்புடன் நடந்து கொண்டார்கள். "அவர்

களுடன் நற்குணத்தோடு நடந்துகொள்ளும்படியாய் அருளியிருக்கி
ருர்கள்.'' அடிமைகளின் பேரில் இஸ்லாம் மார்க்கம் புரிந்திருக்கும்
தயாளத்தை யுலகம் புரிந்திருக்கமுடியாது. இஸ்லாமே அடிமைத்
தனத்தை நீக்குவதன் உத்திரவை வெளியிட்டு, அடிமைகளோடு நற்
குணம், சாந்தம் ஆகியவைகளுடன் நடந்துகொள்ளவேண்டும் என்
னும் கட்டளையையும் பிரப்பித்தது. அவர்கள் சுயேச்சைபெறுவதற்கு
முயற்சி செய்யவேண்டும்; நீங்கள் புசிப்பது, உடுத்துவது போன்ற
வைகளையே அவர்களுக்கும் அளிக்கவேண்டும்; அவர்களின் சக்திக்கு
மேற்பட்டவேலைகளைச் செய்யச் சொல்லக்கூடாது என ஆக்ஞாபிக்
கின்றது. அடிமைகளை யுரிமையாக்கிவிடவும், அவர்களை யுரிமைவிடு
வதில் பெரும் நன்மையுண்டென்றும், பாவத்திற்காக அடிமைகளை
யுரிமைவிடும்படியும் பரிசுத்தஇஸ்லாம் மார்க்கம் உத்திரவளிக்கிறது.
தற்கால கூலியாட்களின் கண்ணியத்திற்கு மேற்பட்ட உயரிய பதவி
யையளித்து, அவர்களை வீட்டின் எஜமானர்களைப்போலவே இருக்
கும்படியாய் செய்துவிட்டது. இஸ்லாம் மார்க்கம் "உலகில் தோன்
றியிராதிருக்கில் அடிமைகளை யுரிமை—சுயேச்சையாக்கிவிடவேண்டு
மென்ற எண்ணமே உலகின் யோசனையில் தோன்றியிருக்காது''

ஏழை, தரித்திரக்காரர் ஆகியவர்களுக்கு உதவிபுரிவது
பெரும்நற்காரியமென இஸ்லாம் மார்க்கம் அறிவித்திருக்கிறது. ஏழை
களை யுலகம் கேவலம் மிருகத்திலும் இழிவாய் நடத்துகின்றது.
ஆனால், இஸ்லாம் மார்க்கம் இராஜனும், ஓர் இழிய நிலைமையிலுள்ள
எழியவனும் தோளோடு தோள் சேர்ந்து மஸ்ஜிதில் நிற்கும்படி
செய்துவிட்டது. ''நீன் எழியவன்; என்னோடு நிற்கவும், உட்காரவுங்
கூடாது'' என்று இஸ்லாமில் யார் சொல்லுதற்கியலும்? முஸ்லிம்களிற்
சிலர் ''இந்தியாவின் உயர்சாதி, கீழ்சாதியென்னும் வெறுக்கத்தக்க
எண்ணத்திற்கு'' இரையாகி, தங்களின் உண்மையான கண்ணியத்தைக்
குலைத்துக் கொள்ள முற்பட்டுவிட்டனர்.

நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்
கள் ''இஸ்லாம் ஏழையாகவே விஜயஞ்செய்து, ஏழையாகவே செல்
லும்'' (இஸ்லாம் ஏழைகளிடமே தோன்றி, ஏழைகளிடமிருந்தே
செல்லும்) என அருளியிருக்கின்றார்கள். இந்த ஹதீதைக் கொண்டு
யேழைகளின் கண்ணியம் எவ்வளவு மேன்மையுற்றதென தெரிகிறது!
கீழ்சாதியின் மக்கட்களும் ஆதம், ஹவ்வா ஆகிய இருவர்களின் சந்
ததிகளே. ''எவன் அல்லாஹுத் ஆலாவிற்கு பயபக்தியுடன் (தக்வா
வுடன்) நடந்து கொள்ளுகிறானோ? அவன் (எப்படிப்பட்ட கீழ்சாதி
யானவனாக விருப்பினுஞ்சரியே) அல்லாஹுத ஆலாவிடத்தில் கண்



ணிய முடையவனாவான்'' நீங்கள் எல்லாரும் சமமானவர்களே, உங்
களில் எவனும் சிரேஷ்டமானவனும், தாழ்ந்தவனுமல்லன். துர்க்
கிருத்தியங்களைச் செய்பவனே தாழ்மையுடையவன். நற்காரியம்
புரிபவன் மேன்மையுடையவன் என பரிசுத்த இஸ்லாம் அறிவித்து
விட்டது.

உலக சரித்திரங்களை நோக்குமிடத்து எப்படிப்பட்ட கீழ்சாதி
யிலுள்ளவனுஞ்சரி, அவர்களின் சக்தி, அறிவு ஆகியவைகளுக்கு
தகுந்த மேம்பதவியை அளிக்கக்கூடிய மார்க்கம் இஸ்லாம் என்று
தெற்றன புலனாகும். சுல்தான் மஹ்மூத் கஜ்னவியின் தகப்பனார்
அடிமை சந்ததியிலுள்ளவர். சுல்தான் அலாவுத்தீன் கலஜீயுடைய
ஜனரல் ஓர் சூத்திர—பஞ்சம ஹிந்துவே. அவனின் வீரதீரத்தின்
காரணத்தினாலேயே அவனைத் தன் பட்டாளத்திற்கு ஜனரலாக்கிக்
கொண்டார். ஆனால், இஸ்லாமல்லாத வேறு எம்மார்க்கமும் சாதி
வேற்றுமையன்றி, அவனவனின் சக்திக்கு ஏற்றவாறு உயர்ப்பதவி
யை யளித்திருக்கவில்லை.

இன்று இந்தியாவில் "சுத்தி இயக்கம்'' தோன்றிவேலை செய்து
வருகின்றது. அவ்விதம் செய்வது மிகநல்லதுதான். பஞ்சமர்களை
யுயர்பதவிக்குக் கொண்டுவந்து, அவர்களோடு கலந்துட்கார்வது,
அவர்களுக்கு அன்னமளிப்பது போன்றவைகள் செய்கிறோமென்று
ஹிந்து சகோதரர்கள் கூறுகின்றனர். இது ஓர் குறிப்பிட்ட நேரத்
திற்கு மட்டுந்தான். ஆனால், அந்நேரத்திற்கு பிறகோ பஞ்சமன்
பஞ்சமன்தான். அவனோடு கலந்து உட்காரவோ, சாப்பிடவோ, பரு
கவோ, கொள்வினைக் கொடுப்பனை செய்யவோ முடியாது. அவைகள்
வெகுதூரம்; அதைபற்றி ஆராயின் வியாசம் நீண்டுவிடும். மேற்கூறிய
யாவும் இஸ்லாமில் உள்ளடங்கியிருக்கின்றன. ஓர் பஞ்சமன் முஸ்லி
மாகிவிட்டால் அவன் மஸ்ஜிதில் எப்படிப்பட்ட மேம்பதிவி யுடைய
வர்களுடனும் தோள் நெருங்கநின்று தொழுகவியலும். ஒரே பாத்
திரத்தில் மற்றமுஸ்லிம்களுடன் சேர்ந்துண்ணவியலும். இஸ்லாம்
கீழ்சாதி மேல்சாதியென பாகுபாடு செய்யவில்லை. அவ்விதம் செய்
வதையும் தடுக்கின்றது.

கிறிஸ்தவ பாதிரிமார்கள் பஞ்சமர்களைக் கிறிஸ்தவ மதத்தில்
சேர்க்கின்றனர். ஆனால், கிறிஸ்தவமார்க்கத்தின் பஞ்சமரின்
மாதா கோயில்வேறு; ஐரோப்பியர்களின் கோயில் வேறாயிருக்
கின்றது. ஐரோப்பியர்கள் சமத்துவம், சமத்துவமென வானம்
வளாவ கோஷிக்கின்றனர். ஆனால், பிர் ஔனும் பனீஇஸ்ரா
யீல்களுடன் செய்திராத விதத்தில், வெள்ளையர், கருப்பர் என்ற

பாகுபாட்டை இன்று தென் ஆப்பிரிக்காவில் செய்கின்றனர். முடி
வாகக் கூறுமிடத்து உலகம் சமத்துவமென்று வாயளவில் மொ
ழிகின்றதேயன்றி செய்கையில் காட்டுவதில்லை. இஸ்லாம் மார்க்க
மோ சமத்துவத்தை அறிவித்து, அதன்படி செய்கையில் நடத்திக்
காட்டுவதை பரல்—கடமையாக்கியிருக்கின்றது. முஸ்லிம்கள் அச்
சமத்துவத்தை மும்மாதிரியாக நடத்திக் காண்பிக்கின்றனர்.

வியாசம் மிகநீளமாகிக் கொண்டுபோகின்றது. ஆகவே, சுருக்
கிக்கொள்கிறேன். ஜீவஜந்துகளைபற்றி சற்று ஆராய்வோம். குதிரை
யின்மீது சுவாராகி, அதைநிற்பாட்டிக் கொண்டே யாரிடமும் சம்பா
ஷிக்கக்கூடாது. ஆனால், அதை உடனே நடத்தித் தான் போய்ச்
சேரவேண்டிய இடத்தையடையவேண்டும். அதன் ஆகாரத்திற்கு
தக்க கவலையையெடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் பரிசுத்த இஸ்
லாம் உத்திரவுவிடுகின்றது. தாகவிடைக் கொண்டிருந்த ஓர் நாயிக்கு
தண்ணீர் புகட்டியதன் பொருட்டு, ஓர் மனிதன் சுவர்க்கமடைந்ததாக
ஓர் ஹதீது வந்திருக்கின்றது. ஒரு பெண்பிள்ளை ஓர் பூனையை
தீனித்தேடி தின்னவிடாமலும், தானும் அதற்கு ஆகாரமளிக்கா
மலும் கட்டிப்போட்டிருந்ததன் நிமித்தம் நரகத்திற்களானாள்

நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்
களின் உலகஞ்சூழ்ந்த கிருபையாகிறது தாவரவர்க்கத்தையும் தன்
னுள் அடக்கிக் கொண்டது. நிழல் கொடுக்கக்கூடிய மரங்களை வெட்ட
வும், அதன்கீழ் மலபாதை ஜலபாதை ஆகியவைகள் செய்யவுங்கூடா
தென்று இஸ்லாம் மார்க்கம் கூறுகின்றது. நாயகம் ஸல்லல்லாஹு
அலைஹிவஸல்லம் அவர்களின் பொருட்டால் அடைந்த நன்மைகளை
யாரால் எண்ணிமுடியும்! சகோதர, சகோதரிகளே! நீங்கள் அவர்
களாற் கற்பிக்கப்பட்ட இஸ்லாம் மார்க்கப்படி நடந்து கொள்ளுகின்
றீர்களா? அவ்விதம் நீங்கள் நடக்காவிட்டால், எம்முகத்தைக்
கொண்டு நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்
களைத் தரிசிப்பீர்கள்? ஆகையால்,நீங்கள் அவர்கள் கற்பித்தபடி நடக்க
முயற்சிசெய்யுங்கள். முதன்மையாகத் தொழுகையை சரிவர நடத்தி
வாருங்கள். ஏனெனில், நமது நபிகள்பெருமானார் அவர்கள் "தொழு
கையே தங்களின் கண்ணிற்குக் குளிர்ச்சி" யென கூறியிருக்கின்றார்
கள். அல்லாஹும்மஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்
மதின் வபாரிக் வஸல்லிம் அலைஹி.

---



# இஸ்லாத்தின் உண்மைகள்.

## சீரான மார்க்கத்தின் உண்மையான படிப்பினைகளும், முஸ்லிம்களின் கஷ்ட நிவர்த்தியும்.

(35-வது பக்கத் தொடர்ச்சி.)

(ஜனாப் ஹஜ்ரத் மௌலானா ஹுஸைன் அஹ்மத் சாஹிப் அவர்கள் எழுதுகிறார்கள்.)

### * மக்கட்களை சீர்திருத்துவதே இஸ்லாமின் நோக்கமாகும்.

மானிட யுலகத்தின் க்ஷீணதிசையைப் போக்கி அதைச்சீர்திருத்தம் செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன் இஸ்லாம் மார்க்கம் தோன்றி, யுலகின் நாலுப்பக்கங்களிலும் பரவிற்று. தேசங்களை யாட்சிப் புரிவது, பொக்கிஷங்களை நிறப்புவது, சாம்ராஜ்ஜியத்தை யேற்படுத்துவதுபோன்ற அசூசியும், வெறுக்கத்தக்கதுமான நோக்கத்தை நம்பரிசுத்த இஸ்லாம் மார்க்கம் கொண்டிருக்கவில்லை. ஸ்கந்கரிரூமி, ஜங்கீஸ்கான், ஹிலாக்குகான் போன்றவர்களின் நோக்கத்தையும், ஐரோப்பிய சக்தியின் நோக்கத்தையுங் கொண்டிருக்கவில்லை. இஸ்லாம் தன் சைனியத்தின் சக்தியைப் பரீக்ஷிக்க நாடவில்லை. அது தன் பொருளாதாரம், வியாபாரம் ஆகியவைகளின் பலத்தைக்கொண்டு யுலகமாந்தர்களின் நாட்டங்களையும், ஜீவனத்தையும் அழித்துவிடுவதற்கு அனுமதியளிக்கவில்லை. எச்சமூகத்தையும், எம்மனிதனையும் அல்லாஹுதஆலாவின் அடிமைகள் வணங்குவதை இஸ்லாம் பிரியப்படவில்லை. எத்தேசத்தவனாயினுஞ் சரி, எச்சமூகத்தவனாயினுஞ் சரி, எந்நிறந்தவனுஞ்சரி எவனையும் உலகில் இழிவுபடுத்துவதை இஸ்

---

* குறிப்பு :—முஸ்லிம் சகோதரர்கள் இவ்வருமை வாய்ந்த வியாசத்தை அதிகவனமாய் வாசிப்பார்களாக! இன்று இந்திய முஸ்லிம்கள் அனுபவித்துவரும் கஷ்ட நிஷ்டூரங்கள், முற்காலத்து முஸ்லிம் (ஸஹாபாக்)கள் அனுபவித்த கஷ்டநிஷ்டூரங்களைப் பார்க்கினும் கொடுமையானதல்ல, ஆதலால், நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சாந்தம், பொறுமை, சகிப்புப் போன்ற சற்குணத்தோடு நம்நேயர்கள் நடந்து கொள்ளுவார்களாக! (ப-ர்.)

லாம் மார்க்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. இஸ்லாமிய சீர்திருத்தத்தை
யொப்புக்கொள்ளுபவன் எப்படிப்பட்டவனுயினுஞ்சரி அவன் "முத்
தகி"யாக ஆகிவிடுகிறுன். அப்படிப்பட்ட ஒவ்வொருவருக்கும்
மரியாதையையும், கண்ணியத்தையும் இஸ்லாம் அளிக்கின்றது. உதா
ரணமாக:—"ஓ ஜனங்களே! ஒரு ஆடவர் (ஹஜ்ரத் ஆதம்
அலைஹிஸ்ஸலாம்) ஒருபெண் (ஹஜ்ரத் ஹவ்வா ரலியல் லாஹு
அன்ஹா) ஆகிய இருவரில் நின்றும் நாம் உங்களை யுண்டாக்கி
னேம்; இன்னும் நீங்கள் (இன்னுரென்று) அறிந்துகொள்ளும் பொரு
ட்டு (உங்களை) பல கூட்டங்களாகவும், பிரிவுகளாகவுமாக்கினேம்.
(ஆனல்) உங்களில் (எவன்) அல்லாஹுதஆலாவுக்குப் பயந்து, பேணி
நடந்தவனே உண்மையாக அல்லாஹுதஆலாவின் சந்நிதானத்தில்
மேன்மையும், கண்ணியமும் உடையவனுகும்" "ஈமான் கொண்ட
வர்கள் உண்மையாக தங்களுக்குள் (ஒருவருக்கொருவர்) சகோதரர்
களாகும்; ஆகவே, உங்களுக்கிடையில் சகோதரத்துவத்தை யுண்டாக்
கிக் கொள்ளுங்கள் (அல்குர்ஆன்).

ஓர் நண்பனை பரிகாரி வியாதியஸ்தனேடும், தயாளமும், பக்ஷ
மும் உள்ளவன் தன் குழந்தை, இனத்தவர்களோடும் அவர்கள் எவ்
வளவு கஷ்டங்களைக் கொடுக்கினும், எவ்விதம் பாந்தங்கொள்ளுகின்றுர்
களோ? அஃதேபோல் உண்மையாக இமுஸ்லிம்கள் உலகின் ஏனை
யமார்க்கத்தினர்செய்யும் கொடுமைகளைப்பொருட்படுத்தாது "இஸ்லா
மை" நட்புக்கொள்ளுகின்றனர். ஆகவே, அறிவிலி, சிறுவர்,
மூடர், விரோதி ஆகியவர்கள் தங்களின் இயற்கைத்துற்குணத்தினுல்
புரியும் கஷ்டநிஷ்டூரம், அநீதம் போன்றவைகளை சீர்திருத்தம்,
தயாளம், உயற்குணம், சகோதரத்வம், சகிப்புத்தன்மை ஆகிய புகழ்க்
குணத்தைக்கொண்டுப் பொருத்தாளவேண்டுமென்று எம்பரிசுத்த
இஸ்லாம் தன்னைத் தழுவியோர்களுக்கு அறிவிக்கின்றது. ஆனல்,
நோயாளியின் நாடி தளர்ந்து, வியாதி மிகைத்து சரீரத்தைக்கெடுத்
துக்கொண்டிருக்கிறது. இனியும் விதவிதமான கஷ்டத்திற்
குள்ளாக்கி விடுமென சந்தேகம் உண்டாகுவதுடன், அதற்கு தக்க
ஔடதம் அளிக்கவும் வசதியில்லாதிருக்கும்போழ்து, ஓர் அனு
போகமுடைய வைத்தியன், ஓர் பக்ஷமுள்ள டாக்டர் ஆகியவர்கள்
மேற்கூறிய நோயாளிக்கு வயற்றுபேதிக்குக் கொடுத்தோ, அல்லது
இரத்தங்குத்தி வாங்கியோ நோயை செஸ்தப்படுத்துவது அவர்கள்
பேரில் கடமையாகிறது. அஃதேப்போலவே, சிற்சில முக்கிய சமயங்
களில், அல்லது விஷயங்களில் மானிடயுலகத்தின் சீர்திருத்தத்தின்
பொருட்டு வாள் எடுத்து அதற்கு பேதிக்குக் கொடுத்தோ, அல்லது



அதன் புளவைக்கு சத்தரஞ்செய்தோ அதன் துற்குணங்களைப்போக்க
வேண்டிய அத்தியாவசியம் பரிசுத்த இஸ்லாமுக்கேற்படுகின்றது.

அறிவாளி, நாகரிகம், சட்டத்திற்குக் கீழ்ப்படிதல், கல்விமான்
ஆகியவர்களுக்கும் மடையன், அநாகரீகன், கல்வியில்லான், சட்டத்
திற்குக்கீழ்ப்படியான் ஆகியவர்களுக்கிடையில் எதிர்ப்பு உண்டான
போழ்து எப்போதும் முற்பகுதியினர்களின்பேரில் அநீதத்தின் சிறு
மழைத்துளிகள்வருஷிக்கும். அவைகளை அறிவு, நாகரிகம், சட்டம் கல்வி
ஆகியவைகள் ஸ்திரமென்ற மைதானத்தில் நிலையுற்று, மடமை, அறி
வின்மை, அநாகரீகம், சட்டத்திற்குக்கீழ்ப்படியாமை ஆகியவைகளின்
நடவடிக்கைகளைத் தடுத்து, மனுஷ்யத்தன்மை, சட்டதிட்டங்கள்
ஆகியவைகளைக் கைவிட்டுவிடாமல் இருக்கும்படியாய் நிற்பந்திக்கும்.
ஆனல், இரண்டாம் பகுதியினரோ உண்மையைமறைத்து, மழுப்பி
விடுவார்கள்; சுயநன்மையைத்தீர்ப்பளிப்பார்கள்; குறுகியநோக்கமும்,
விரோதத்தன்மையுங்கொண்டு காரியஞ்செய்வார்கள்; கெடுதியைப்
பூசிப்பதையே தங்களின் ஜீவனமாகக் கொள்ளுவார்கள்; அதிவெட்க
கரமான காரியத்தைச்செய்து, உண்மைக்கூட்டத்தினரையும், முற்
பகுதியினரையும் அபகீர்த்திக்கு உட்படுத்துவார்கள். தங்களை
யாதும் குற்றமற்றவர்களெனக்காட்டிக்கொள்ளும்பொருட்டு எல்லா
விதமான சக்தியைக் கொண்டும் வேலைசெய்ய பின்னடையார்கள்.
இத்தன்மையான அநேககாரியங்கள் "இஸ்லாமை" எப்போழ்தும்
எதிர்த்துவருவது சகஜமேயன்றி புதியதன்று. ஆனல், நம்சத்திய
இஸ்லாம் மார்க்கத்தின் ஸ்தாபகரரான பரிசுத்த நமது நபிகள்
பிரான், முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும்,
அவர்களைப்பின்பற்றிய முஸ்லிம் (ஸஹாபாக்)களும் உண்மை, நீதம்,
சீர்திருத்தஞ்செய்வது போன்ற காரியங்களை யெப்போழ்தும் தங்
களின் கரத்திலிருந்து விட்டுவிடவில்லை. அவர்கள் மேற்கூறிய துஷ்
டர்களின் மடத்தனம், வழிகேடு ஆகியவைகளுக்கு மடத்தனம், வழி
கேடு போன்றவைகளினுல் பதிலளிக்கவில்லை.

அல்லாஹுதஆலா தனதுபரிசுத்த குர்ஆன் ஷரீபில் பின்வரு
மாறு திருவுளமாகியிருக்கிறுன்:—" மூமினனவர்களே! நீங்கள்
நாயனுக்காக (அவனுடைய வழிப்பாட்டைக்கொண்டு) நிலைத்திருங்
கள். நீதத்தைக்கொண்டு சாட்சி பகறுங்கள். காபர்களுடைய
கோப(த்தினுலு)ம் உங்களை அநியாயத்திற்குள்ளாக்கி விடவேண்டாம்.
(பகைவர்களிடத்தும், சிநேகர்களிடத்தும்) நீங்கள் நீதமாகயிருங்கள்.
அது (நீங்கள் அவ்விதம் நடப்பது)தான் தகவாவுக்கு முடிகியது.
இன்னும் அல்லாஹுத ஆலாவைப் பயப்படுங்கள். நிச்சயமாய் அல்லா

ஹுதஆலா நீங்கள் செய்யும் அமல்களை (செய்கைகளை) அறிந்தவன்." "குப்பார்கள் உங்களை மஸ்ஜிதுல் ஹராமைவிட்டும் தடுத்துவிட்ட தற்காக அவர்கள்மீது நீங்கள் கொண்டிருக்கும் கோபம், அவர்கள் பேரில், சண்டைமுதலிவைகளினால் நீங்கள் ஹத்துக்குமீறியவர்களாகி விட வேண்டாம். ஏவலைஎடுத்து நடப்பதிலும், விலக்கலை விட்டும் நீங் கிக் கொள்வதிலும், ஒருவருக்கொருவர் உதவியாகவிருங்கள். பாவத் தின்பேரிலும், அல்லாஹுத ஆலாவின் கட்டளைக்கு மீறுவதிலும் உதவியாகவிருக்கவேண்டாம். நாயனுக்கு வழிப்பட்டு, அவன் வேதனையை பயந்துகொள்ளுங்கள். ஏனெனில், நிச்சயமாக நாயன் தனக்கு விரோதம்செய்தவர்களை வேதனைச்செய்வதில் கடுசானவன்" (அல்குர்ஆன் ஸூரத் மாயிதா).

மேற்கூறிய சட்டதிட்டங்களின்பேரில் நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும், சிறப்பான முன்னோர் களும்விரோதிகளையும் சிநேகிதர்களையும்நீதத்தின் கண்ணைக்கொண்டு நோட்டமிட்டுக்கொண்டே இருந்தார்கள். அவர்கள் எப்போழ்தும் அல் லாஹுத ஆலாவின் சட்டதிட்டங்களுக்கு பூரணமாய் வழிபடுவது, தங்களின் நற்நோக்கம், நற்போதனை ஆகியவைகளைக்கொண்டு விரோ திகளின் துர்க்கிருத்தியங்களை தோல்வியறச்செய்துக்கொண்டே யிருந்தார்கள். அக்கண்ணியவான்கள் ஒருபோழ்தும் நீதத்தைக் கைநழுகவிட்டுவிடவில்லை.

### தற்கால முஸ்லிம்களுடைய கஷ்டங்கள்.

### உஸ்வயே ஹஸனவை பின்பிற்றுவதைக் கோண்டே நிவர்த்தியாகும்.

முஸ்லிம்கள் தங்களுடைய ஒவ்வொரு சந்தோஷமற்ற காரியங்க ளுக்குக்காரணம் கீழ்காணுமாறு கூறுகின்றார்கள் :—நம்தேச சகோத ரர்கள்நம்முடைய எக்காரியத்திலும் பலனளிக்கக் கூடியவர்களாகவிரு க்கவில்லை. அவர்கள் அதிகாரவர்க்க இலாக்காக்களில் முஸ்லிம்கள் பிரவேசிக்கவிடுவதில்லை. இந்நிலைமையில் தப்பித்தவரி எவராவது பிர வேசித்துவிடின், அவர்களை நிர்ப்பந்தித்து வெளியாக்கிவிடுகின்றனர்; நகர சபை(Municipal Board) ஜில்லாசபை (District Board) சட்ட நிரூபணச் சபை (Legislative Council) ஆகியவைகளில் முஸ்லிம் களை வெளிப்படுத்துவதற்காக "சங்கடன்" போன்ற சபைகளிருக் கின்றன. ரயில்வே அதிகார இலாக்காவிலும், தந்தி, தலிபோன் போன்ற உத்தியோகங்களிலும் அஃதேபோலவே. சட்ட நிரூபணச் சபைகளில் சமூகவாரியாக பிரதிநிதித்வம் ஏற்படுவதையும் அழித்து நாசமாக்க நாடுகின்றனர். எல்லாவித வியாபாரத்தைக் கைப்பற்றி



யிருப்பதோடு, பயிர்ச்செய்கையிலும் மேன்மையுற்றும், ஜனக்கணி தம்,ஜமீந்தார் ஆகியவைகளிலும் முஸ்லிம்களைப் பார்க்கிலும் மிகைத் திருக்கின்றனர். அவர்கள் முஸ்லிம்களின் அபிவிருத்தியை நாடாத வர்களாகவிருப்பினும், அச்சமூகம் ஜீவித்திருப்பதையும் வெறுக் கின்றனர்.

பொதுவாக மேற்கூறப்பட்டுள்ள காரியங்கள் பிரசங்கம், வியா சம் ஆகியவைகளின் மூலமாய்வெளியிடப்படுகின்றன. அவைகளை நான் மறுக்கவில்லை. ஆனால், முஸ்லிம் அல்லாதவர்களின் இப்படிப்பட்ட காரியங்கள் இன்று புதியதாக விருக்கின்றதா? அல்லது இப்படிப் பட்ட குறுகிய நோக்கம் படைத்தோர் எப்போழ்தும் இருந்துவரு கின்றனரா? என்பதே என்னுடைய கேள்வியாகும். இதைப்பற்றி அல்லாஹுத ஆலா தனது குர்ஆன் ஷரீபில் திருவுளமாகி யிருப்ப தாவது:—"வேதக்காரர்களென்னும் யூதர்களும், கிறிஸ்தவர்களும் முஷ்ரிக்கென்னும் இணைவைப்போர்களும் (பொறாமையால்) உங்க ளுக்கு உங்களுடைய நாயன் யாதாவதொரு நன்மையி (காரியத்தி)ல் இடம் அளிப்பதை விரும்பார்கள். (ஓ மூமினானவர்களே!) காபர்கள் சக்தி பெற்றார்களாயின், (நீங்கள்) உங்களுடைய மார்க்கத்தை விட் டும் நீங்கும் (அவர்களுடைய மார்க்கத்தில் சேரும்) வரையில் சதா (உங்களோடு) யுத்தம் செய்து கொண்டிருப்பார்கள். (அல்குர்ஆன் ஸூரத் பக்ரா)

இத்தகைய குறுகிய நோக்கம் படைக்கப்பட்டோர் முற்காலத்து முஸ்லிம்களிடத்தில் மட்டும் நடந்துகொள்ளவில்லை. ஆனால், இத் தகையோர் ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு தேசத்திலும், எப் போழ்தும் இருந்துவந்திருப்பதாகவே சரித்திரத்தில் காணக் கிடக்கின்றது.

இந்தியாவில் முஸ்லிம்களின் பூண்டே இல்லாமல் செய்து, அவர் களின் சக்திகளை யழித்துவிட வேண்டுமென்ற எண்ணத்துடன் சங் கத்தனுடையவர்களும், மற்றதேசீய சதோதரர்களும் "தங்களில் ஒற்றுமையை யுண்டாக்குவது, பொருளாதாரம், ஆயுதம், பத்திரிகை ஆகியவைகளை அதிகப்படுத்தக் கருதுகின்றனர். அதிகார வர்க்கத் தில் ஒவ்வொரு ஸ்தானங்களையும் கைப்பற்றுவது, அதிகக்கல்வியை யடைவது போன்றவைகளினால் முஸ்லிம்களை யெதிர்க்கவேண்டுமென மொழிகின்றனர். மேலேவரையப்பட்ட பாராவில் அல்லாஹுத ஆலா தன்பரிசுத்த குர்ஆன்ஷரீபில் திருவுளமாகி யிருப்பதைப் போலவே இன்று அவர்கள் பகிரங்கமாக வெளிக்கிளம்பி கூறுகின்றார் கள்:—முஸ்லிம்கள் முர்த்தத்தாகி (தங்கள் பரிசுத்த இஸ்லாம் மார்க்

கத்தைவிட்டும் நீங்கி)விட வேண்டும்; (நவூது பில்லாமின்ஹாஹி அவ்
விதம் முர்த்தத்தாகாமல் நம்யாபேர்களையும் அல்லாஹு தஆலா காப்
பாற்றுவானாக!) ஹிந்துக்களாகவே இத்தேசத்திலிருக்க வேண்டும்;
அல்லது முஸ்லிம்கள் குறைந்தபக்ஷம் ஹிந்துக்களின் ஆசாரக்கிரிகை,
நடவடிக்கை ஆகியவைகளைச் செய்யவேண்டும்; இல்லையேல் அவர்
கள் எங்கள் தேசத்தைவிட்டு விட்டு, இந்தியாவிற்கு வெளியில் போய்
விடவேண்டும்'' என்பதே. அதிகாரவர்க்கமோ, அவர்களின்
கூக்குரலைக்கொண்டுப் பயமுறுகிறது. உண்மையை அறிந்திருந்தும்
மேற்கூறிய கிளர்ச்சிக்காரர்களைத் தண்டிப்பதற்கு நடுங்குவது
போன்றகாரியங்களாற் அவர்களுக்கு உதவியளிப்பதாக யூகிக்கயிட
மேற்படுகின்றது.

மேற்கூறப்பட்டக் கருமங்கள் பரிசுத்த இஸ்லாமுக்கு புதிய
தாகத் தோன்றிய விரோதமென நான் கூறமாட்டேன். ஏனெனில்,
இப்படிப்பட்ட அநீதங்களும், அநியாயக்காரர்களும் எப்போழ்தும்
இஸ்லாமை எதிர்த்தவண்ணமாகவே இருக்கின்றனர். நமது நாயகம்
ரஸூல் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பேரி
லும், சிறப்புற்ற மஹான்களாகிய ஸஹாபாரலியல்லாஹு அன்ஹும்
ஆகியவர்கள்பேரிலும் மேற்கூறிய அநியாயமென்ற கற்பாறமலையை
இடித்துத்தள்ளப்பட்டது.

பரிசுத்த மக்கா நகரின் குடிபடைகளும், சிறப்பான மதினமா
நகரின் நயவஞ்சகர்,யூதர், அதன் சுற்றுப்புறத்து அரேபியர் ஆகியவர்
களும் நபித்துவத்தின் காலத்திலும், அதற்குப் பிறகும், ஏனைய
தேசத்திலும் முஸ்லிம்களல்லாதார் பரிசுத்த இஸ்லாம் மார்க்கத்தி
லுள்ளவர்களுக்கு, மேற்கூறிய கொடுந்துன்பங்களை யின்றுவரை
இழைத்தவண்ணமாகவே இருக்கிறார்களென்பது, அதிவிஸ்தாரமாய்
இஸ்லாமிய சரித்திர நூற்களிற் பொதிந்துகிடக்கின்றன. உதார
ணமாக :—''நிச்சயமாய் (நீங்கள்) உங்கள் முதல்களிலும், உங்கள்
ஹிர்தயங்களிலும் சோதிக்கப்படுவீர்கள். உங்களுக்குமுன் வேதத்
தைக் கொடுக்கப்பட்டவர் (யூதர், கிறிஸ்தவர்) களாலும், நாயனுக்கு
இணைவைத்த காபர்களாலும் ஏசுதல், பழிக்கூறல், குறைகூறல்
போன்ற நோவினையைத்தரும் அநேகவார்த்தைகளையும் கேட்பீர்
கள். அதன்பேரில் நீங்கள் ஸபுர்—சகிப்புச் செய்து, நாயனுக்கு
தக்வா (பயந்து கொள்ளுவீர்களாக) செய்வீர்களானால், அது நற்
காரியங்களிலுள்ளது.'' (அல்குர்ஆன் ஸூரத்ஆல இம்ரான்.)

நம்பரிசுத்த குர்ஆன்ஷரீபில் இப்படிப்பட்ட அநேக ஆயத்து
கள் வந்திருக்கின்றன. அதன்படி நாம்நடக்கவேண்டுமென கண்டித்



திருப்பதுடன், அறிவித்திருப்பதாவது :—''நீங்கள் பரீக்ஷிக்கப்
படுவதன்றியே நன்மையின்பக்கமாவது, ஈடேற்றமடைவது, சுவர்க்
கம் புகுதுவது ஆகியகாரியங்கள் ஆகிவிடுமென்று (நீங்கள்)
எண்ணிக்கொள்ள வேண்டாம்.'' (குர்ஆன்ஷரீபின் ஸூரத் அன்
கபூத்தின் முதற்பிரிவிலும், ஸூரத் தௌபாவின் இரண்டாம்
பிரிவிலும், ஸூரத் ஆலஇம்ரானின் இறுதிபாகத்திலும் காண்குக!),
இன்னும் திருவுளமாகியிருக்கிறான்:— (முஹம்மதே!) நீர் யூதர்,
கிறிஸ்தவர் ஆகியவர்களின் மார்க்கத்தை பின்பற்றும் வரையில்,
அவர்கள் உங்களைப் பொருந்திக் கொள்ளமாட்டார்கள்.''
''உங்களுக்கு (உதவி, வெற்றிப்பொருள் ஆகிய) யாதொரு உலகப்
பிரயோஜனம் கிட்டிவிடுமாயின், அது அக்காபர்களைவிசனத்திலாக்கி
விடும். (பஞ்சம், தோல்வியடைதல்போன்ற) யாதொரு தீங்கு உங்க
ளைச் சாருமானால், அதன்பொருட்டு அவர்கள் மகிழ்வுறுவார்கள்.
அவர்கள் செய்துவரும் துன்பங்களுக்கு ஸபுர் செய்தும், (அவர்கள்
பிரியப்படுவதுபோன்ற காரியங்களில்) நாயனை பயந்துகொளுவீர்க
ளானால், அவர்களுடைய குபாடம் உங்களை யாதொரு கெடுதலும்
செய்துவிடாது. நிச்சயமாய் நாயன் அவர்கள் செய்யும்காரியங்களை
(மிகநங்க) அறிந்தவன்.'' ''இன்னும் இவர்கள் (முஸ்லிமல்லாதார்)
நாம் உங்களுக்கு வஹியின் மூலமாய் இறக்கிவைத்த கட்டளைகளை
நீங்கள் நம்பேரில் கெட்ட யெண்ணங் கொள்ளுவதற்காக, (அதனை)
அணைத்துவிட சமீபித்தார்கள். இந்நிலைமையில் அவர்கள் உங்களை
யுண்மையான நண்பர்களாக்கிக் கொள்ளுகின்றனர். இன்னும் நாம்
உங்களை ஸ்திரமாக்கிவைக்காவிட்டால், நீங்கள் கொஞ்சங்கொஞ்ச
மாக அவர்களின் பக்கத்திற்கு சார்ந்து விடுவீர்கள்.'' ''காபர்கள் தங்
கள்ரஸூல்மார்களுக்குச் சொன்னார்கள்:—''நாங்கள் சத்தியமாய் உங்
களை யெங்களூரைவிட்டும் அப்புரப்படுத்தி விடுவோம். அல்லது நீங்
கள் எங்கள்மார்க்கத்தில் திரும்பிவிடுங்கள்(என்று)அப்போழ்து அந்த
ரஸூல்களுக்கு அவர்களுடைய நாயன் வஹியின் மூலமாய் அறிவித்
தான். (அதாவது) அநீதக்காரர்களை நாசப்படுத்தி விடுவோம்
அவர்களுக்குப் பின் உங்களை யப்பூமியில் குடியிருக்கச் செய்வோம்.''
''இது என்னுடைய சந்நிதானத்தில் நிற்பதையும், என்னுடைய
பயமுறுத்து தலையும் பயப்படுகிற ஒவ்வொருவனுக்காகவுமிருக்கும்.
ஒவ்வொரு கூட்டமும் மற்றக்கூட்டத்தை மிகைத்துக்கொள்ள நாடு
கின்றன. (ஆனால்,) முறட்டுத்தனம், துஷ்டத்தனம் ஆகியவைகளு
டையவர்கள் நஷ்டத்தை யடைந்தார்கள். யாவும் வீணானதாகவும்,
பலனற்றதாகவுமாகி விட்டன. (அல்குர்ஆன்)

ஹஜ்ரத் ஷுஐப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கும், அவர்கள்மீது ஈமான் கொண்டிருந்தோர்களுக்கும் (இன்று ஹிந்து சமூகத்தினர் முஸ்லிம்களுக்குச் சொல்லுவதுபோன்ற சொற்களையே)சொல்லப்பட்டது. அஃதாவது:—''ஓ ஷுஐபே! நீரும், உம்மைப்பின்பற்றியவர்களும் எங்களுடைய மார்க்கத்தில்சேர்ந்து கொள்ளவேண்டும். இல்லையாகில் உங்கள் யாவரையும் எங்கள் ஊரிலிருந்து தேசப்பிரஷ்டம் செய்துவிடுவோம்'' என்பதே. நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களையும், அவர்களைப் பின்பற்றியவர்களையும் இவ்விதமே, மக்கத்துக் குரைஷிக்காபர்கள் பயமுறுத்தினர்கள். அதைப்பற்றி அநேகவிடங்களில் விரித்துக் கூறப்பட்டிருக்கிறது. அவர் (மக்கத்து குரைஷிகாபர்) களின் கொடுமையால் முஸ்லிம்கள் ''ஹபஷ்'' தேசத்திற்கும், மதினமா நகருக்கும் ஹிஜ்ரத்துச் செல்லும்படியாக நேர்ந்தது. இதைப்பற்றி அல்லாஹுதஆலா தனது குர்ஆன் ஷரீபில் திருவுளமாகியிருக்கின்றான்:—''இன்னும் இவ்விதமே நாம் ஒவ்வொரு நபிக்காகவும் மனிதன், ஜின் ஆகியவர்களில் நின்றும் துஷ்டத்தனமுடைய அநேக பகைவர்களை யுண்டாக்கினோம். (அவர்கள்) ஒவ்வொருவரும் மற்றவர்களுக்கு ''அவர்கள் ஏமாற்றமடைவதற்காக'' வஞ்சகச்சொற்களையும், தூஷணைச் சொற்களையும் மொழிந்தும், போதித்தும் வந்தார்கள்.'' (அல் குர்ஆன்) அவ்விதமே நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் அவர்கள் ஏமாற்றமடைவதற்காக எல்லாவித விரோதிகளும் இருந்துவந்தனர். அவர்கள் நயவஞ்சகம், குபாடம், தூஷணைபோன்ற அநேகச்சொற்களையே மொழிந்துவந்தனர்.

இன்று இந்தியாவிலும், ஏனைய தேசத்திலும் முஸ்லிம்களல்லாதார் எப்படிப்பட்ட அபிப்பிராயங்களை நம்பரிசுத்த இஸ்லாம் மார்க்கத்திற்கு இழைத்துவருகின்றனரோ? அப்படிக்கொற்ற அநீதங்களைப் புரியும் கூட்டங்கள் ஒவ்வொரு காலத்திலும், அல்லாஹுதஆலாவுடைய உண்மையும், நியாயமுமான அடியார்களுக்கு எதிரிடையாக இருந்தேவந்திருக்கின்றனர். முக்கியமாய் இப்படிப்பட்டக் கூட்டத்தினர் நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கும், சிறப்பான ஸஹாபாக்கள் ரலியல்லாஹு அன்ஹும் அவர்களுக்கும், முற்காலத்து முஸ்லிம்களுக்கும் மேற்கூறிய சொல்லொண்ணா கொடுந்துன்பங்களை யிழைத்தனர். ஆகவே, நாயகம் அவர்கள் ''நான் எவ்வளவு கஷ்டங்களை யனுபவித்தேனோ? அவ்வளவு கஷ்டங்கள் வேறு எந்த நபிமார்களும் அனுபவிக்கவில்லை'' என திருவுளமானார்



கள். ஆனால், அவர்கள் இப்படிப்பட்ட எல்லாகஷ்டத்திற்கு ஆளாகியும், உண்மையின்மீது மிகைத்தே இருந்தனர்.

நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உண்மையோடியைந்துவந்த சற்குணச்செய்கைகளையே, இன்று நம் முஸ்லிம்கள் அதிஅத்தியாவசியமாகக் கைக்கொள்ளவேண்டும்.

மக்கத்துக் காபர்கள் எல்லாவிதமான கொடுமைகளையும், தொந்தரைகளையும் செய்திருக்கிறார்களென்பது சரித்திரங்களில் நிறைந்துகிடக்கின்றன. அவர்கள் புரியாத எந்த கொடுமைகளும் உலகில் மீதியாக விருக்கவில்லை. ஆனால், நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அம்முஷ்ரிக்குகளோடு செய்துகொண்ட சமாதான உடன்படிக்கையிலும் ''இஸ்லாம்'' சுயேச்சையானது என மொழிவதற்கு முடியாதவிதத்தில் உடன்படிக்கையின் நிபந்தனைகளை யக்காபர்கள் ஏற்படுத்தினார்கள். நாயகம் அவர்களின் நேசர்கள் இப்படிப்பட்ட சமாதான உடன்படிக்கையைச்செய்துகொள்ள பிரியமற்று, உயிர்ப்பொருள் ஆகியவைகளைத் தத்தஞ்செய்வதற்குத் தயாராக விருந்தனர். ஆனால், சமாதானத்தை நிலைநாட்டவும், சதியாலோசனை, கொலை ஆகியவைகளைத் தடுக்கும் பொருட்டும், உண்மையின் தொனியையுயர்த்தி, நற்குணத்தை நிரூபிப்பதற்காகவும், நாயனுக்காகவும், கஃபாவிற்காகவும் வெளிப்படையில் தங்களைப் பேடிகனென்றும், சக்தியற்றவர்களென்றும் கண்ணியக்குறைவு படுத்தக்கூடிய மேற்படி சமாதான உடன்படிக்கையில், நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கையெழுத்திட்டார்கள்.

அச்சமயமே ''இவ்வுடன்படிக்கை அதிவெற்றியுடையதென குர்ஆன்ஷரீபின் ''பதஹ்'' என்ற ஸூரா இறங்கியது.'' அதன்பேரில் ஹஜ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப்போன்ற மிக அறிவுடையோர்கள் புதுமையுற்று, நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் ''அவப்தஹுன் ஹுவ? யா ரஸூலல்லாஹ்!'' ஓ அல்லாஹுத ஆலாவின் ரஸூலே! (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமே!) இதுதானா வெற்றி? எனக்கேட்கவாரம்பித்தனர். அதற்கு நாயம் அவர்கள் ''ஆம்.இதுதான்வெற்றி,'' யெனபதிலளித்தார்கள். அஃதேபோல் இவ்வுடன்படிக்கை எல்லாவிதமான ஜயத்தையளிக்கக்கூடியதாக வாயிற்று. அவ்வுடன்படிக்கையே இஸ்லாமின் கண்ணியத்தை முழு அரேபியாவில் அதியாடம்பரமாக நிலைக்கச்செய்தது. அதுவே, குரைஷிக்காபர்கள் வாளின் கூர்மையைமழுக்கி, கறள்பிடிக்கச்செய்தது. ...........

(தொடரும்.)

# தயானந்தரும், தீனுல் இஸ்லாமும்.

## இரண்டாவது ஆட்க்ஷேபணை

"எல்லா சிருட்டியின் முதல்வனே! அல்லாவே, அருளாளனே! தயாபரனே!! உனக்கே எனது வழிபாடு" (1—1: 2) கடவுள் சிருஷ் டிகளின் நாயனாய், தயாளுவாய், ஜீவன்களிடத்தில் கருணைவாய்ந்தவ ராயிருப்பின், அவர் பிறமதத்தாரையும், கால்நடைகளையும் கொலை செய்வதை ஆதரிப்பாரா? உண்மையில் தயாளுவாயின் பாபிகளிட மும் அவர்கருணைகாட்டுவாரா? "கருணை காட்டுவார்" என்று பதில் அளிக்கப்படுமாயின், அப்பதில் பொய்யான வார்த்தையாகும். ஏனெனில், "காபர்களைக்கத்திக்கு இரையாக்கு" என்று இம்மதம் கூறுகிறது. (அதாவது:—)"குர்ஆனில் நம்பிக்கையில்லாதவன் மதத் திலும் நம்பிக்கையில்லாதவன்" என்று கொள்ளப்படுகின்றான். எனவே, குர்ஆன்ஷரீபை ஏற்காதவனையும், நபியிடம் நம்பிக்கையற்ற வனையும் கொல்லுவது சரியென்று ஆகிறது. ஆகவே, மகம்மதியர் (முஸ்லிம்)களல்லாதாரிடத்தில் குர்ஆன்ஷரீபு கொடுமையுடனிருப்ப தாலும், பசுமுதலிய கால்நடைகளிடத்தில் பச்சாதாப மற்றதாக விருப்பதாலும் இது கடவுளின் வாக்காகாது." (ச-பிரகாசம் 14-அத்: 277-பக்கம்)

## மேற்படி ஆட்க்ஷேபணைக்கு விடை

கனமிக்க ஸ்வாமியவர்கள் இவ்வாட்க்ஷேபணத்தில் மூன்று விஷ யங்களைக் கொண்டு கடவுள் தயாளகுணமுடையவரல்லவென்று மறுக் கிறார். (1) பிற மதஸ்தரைக்கொலை செய்ய அனுமதித்தல்; (2) கால்நடைகளைக் கொலை செய்ய அனுமதித்தல்; (3) பாபிகளிடத் தில் கருணைகாட்டல். இம்மூன்றில் இரண்டாவதாகக் கூறப்பட்ட விஷயத்திற்கு முதலில் விடையளிக்கப்பட்டுப் போயிற்று. ஆகை யால், இப்போழ்து நாம் 1-3 முதலியவைகளைப்பற்றி ஆராய்வோம்.

முதலாவது, காபர்களைக்கத்திக்கு இரையாக்கு என்று இம்ம தம் கூறுகிறதென நம் ஸ்வாமி கதருகிறார். அத்துடன் "மகம்மதியர் களல்லாதாரிடத்தில் குர்ஆன்ஷரீபு கொடுமையுடனிருப்பதால்......... ...........இது கடவுளின் வாக்காகாது என்று ஸ்வாமிவெகு தைரியமா கவும் கூறுகிறார். நம் ஸ்வாமி கூறுவது உண்மையாயின், அவரால்



அனுஷ்டித்துவரும் மதமும் தேவவாக்கல்லவென்று தெரிகின்றது. "ஸ்வாமியாரால் வேதம் என்று ஒப்புக்கொள்ளப்பட்ட நூற்களைத் தவிர, இதரகிரந்தங்களை வேதப் பிரமாணமென்று கருதுவது நாஸ் திகவாதமென்று கூறுகிறார்." (...............11 அத்: 43-பக்கம்)

"வேதம் வேதானுகூலமாயிருக்கும் முனிகளாற் செய்யப்பட்ட நூற்கள். இவைகளை மறுப்போரை நாஸ்திகர்கள் என அறிந்து அப்புறப் படுத்தவேண்டும். வேததூஷணை செய்கிறவனுகையால், அவனை ஜாதி, சமூகம், தேசம், சற்குணம் வாய்ந்தவர்கள் இவைக ளறிந்து விலக்கவேண்டும்." (..............அத்: 3-பக்கம் 60.) என நம் ஸ்வாமியார் கூறுகிறார். ஆரியர்களுக்கு இந்தியாவின் அரசுரிமை கிடைக்குமென நம் ஸ்வாமியார் கண்ட கனவு நிறைவேறியிருந்தால், இதரமதஸ்தர்களை மேற்கூறியவிதம் தேசப்பிரஷ்டம் செய்திருப்பார். (ஆனால், துரதிர்ஷ்டம் அப்படிக்கொற்ற அரசுரிமை கிடைக்கவில்லை.) மேலும், ஸ்வாமிசொல்லுகிறார்: வேதங்களுக்கு விரோதமானவைகளை வேருடன் அழித்துவிடவேண்டும்." (தயானந்தரின் "ஆரியாபூனி" ஹிந்தி பக்கம் 17,) இன்னும், "விரோதிகள் எங்கள் மதத்தையொப் புக்கொள்ளவேண்டும். அல்லது எங்கள் அடிமைகளாக விருக்கவேண் டும். அல்லது அவர்கள் தங்கள் உயிர்களைவிட்டுக் கைகளைக் கழுவி விடவேண்டும்." (மேற்படி புத்தகம், மேற்படி பக்கம்)

இதரமதஸ்தர்களை யழித்துவிடவேண்டுமென்று கூறும், ஸ்வாமி யாரின் பிரமாணங்கள் ஸ்வாமியாரின் மதத்தையும் (அதாவது:—நம் பிக்கைப்படி) பொய்யான மதமென்று ரூபிக்கிறதன்றோ? விரோதி களைப் பலவிதமாக இம்சித்து வதைசெய்யும்படியாக ஸ்வாமியாரின் வேதநூற்களில் காண்கின்றோம். எனினும், மேற்காட்டிய சில விஷயங்களை போதுமென நிறுத்திக்கொள்ளுகிறோம். பிற மதஸ் தர்களை யெவ்வாறு ஸ்வாமியாரின் மதம் கொலைசெய்யும்படி ஏவுகின் றதோ, அவ்வாறு எமது பரிசுத்த இஸ்லாம் மார்க்கம் கூறவில்லை. "காபர்களைக்கத்திக்கு இரையாக்கு" என்று இஸ்லாம்மதம்கூறுவதாக ஸ்வாமியார் வரைந்திருப்பது அவரது அந்தகாரமே யன்றி வேறல்ல. இதற்கு மாற்றமாக எமது இஸ்லாம் மதம் கூறுவதா வது:—"மதசம்பந்தமான விஷயங்களில் எவ்வித பலாத்காரமுமிருக் கக் கூடாது? (குர்ஆன் 2:256,) உமது கடவுள் நாடியிருந்தால் உலகி லுள்ள எல்லோரும் நேர்வழி யடைந்து விடுவார்கள். (அவ்வாறு யிருக்கக்கூடிய விஷயம்) ஓ முஹம்மதே! (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) நீர் ஜனங்களை மூமினனவர்களாகும் வரையில் பலாத்காரம் செய்வீரோ? (குர்ஆன் 10:99) என்றுகூறி, "மதசம்பந்தமான விஷ

யங்களில் (இதர மதஸ்தர்களுடன்) பலாத்காரம் செய்யக்கூடாதென
வற்புறுத்தி, ஏனைய மதஸ்தர்களை (இஸ்லாம் மதத்தளவில்) அறிவைக்
கொண்டும், நல்லுபதேசங்களைக் கொண்டும் அழையுங்கள்; அவர்
களுடன் அழகானமுறையில் தர்க்கம் புரியுங்கள்'' (குர்ஆன் 15:125)
என்று எமதிஸ்லாம் மதம் ஆக்ஞாபிக்கின்றது.

உலகத்திலுள்ள எந்தமதமாவது இதரமதங்களுடன் நடந்து
கொள்ளாத விதமாக, இஸ்லாம் மதம் முஸ்லிம்களை நடந்து
கொள்ளும்படி வற்புறுத்தியிருக்க, இஸ்லாம் மதம் ஏனையமதஸ்தர்
களை "வாளுக்கு இரையாக்கு'' என்று கூறுவதாகப் பறைசாற்றுவது
மன்னிக்கமுடியாத பெரும் அநீதமாகும். முஸ்லிம்களை காபர்களுடன்
யுத்தம்புரியும்படி (குர்ஆன்) ஏவுகிறதேயென எவரேனும் வினவுவாரா
யின், எமது தீனுல் இஸ்லாம் எவ்விதபாகுபாடுமின்றி, எல்லா இதர
மதஸ்தர்களுடனும்யுத்தம்புரியும்படி ஏவவில்லை என யாம் கூறுவோம்.
இதற்கு ஆதாரமாகக்கீழே வரைந்திருக்கும் (திருகுர்ஆன் அம்சங்
களைப்பார்க்குக!) "ஓ முஸ்லிம்காள்! உங்கள் மதத்தின் காரணமாக
உங்களுடன் யுத்தஞ்செய்யாதவர்களுடனும், உங்களை யுங்கள் இல்லங்
களிலிருந்து அப்புறப்படுத்தாதவர்களுடனும், கருணைகாட்டவும்,
நீதமாகநடந்து கொள்ளவும் விலக்கப்படவில்லை. ஆனால், உங்களின்
மதத்தின் காரணமாக உங்களுடன் யுத்தம் புரிகிறவர்களோடும், உங்
களையுங்கள்இல்லங்களிலிருந்து அப்புறப்படுத்தும்படி மற்றவர்களுக்கு
உதவிபுரிந்தவர்களுடனும், சிநேகமான சம்பந்தம்வைத்துக்கொள்ளக்
கூடாதென்று உங்களுக்கு அறிவிக்கப்படுகின்றது. இப்படிப்பட்ட
வர்களுடன் சிநேகமான சம்பந்தம்வைத்துக் கொள்ளுகிறவர்கள்
அநீதக்காரர்களாகவிருக்கும்'' (குர்ஆன் 60:8,9,) ஓ முஸ்லிம்களே!
உங்களுடன் யுத்தஞ்செய்கிறவர்களோடு நீங்களும் யுத்தஞ்செய்யுங்
கள். ஆனால், வரம்பைக்கடப்பதைக் கொண்டு எச்சரிக்கையாக விருங்
கள்; ஏனெனில், (ஆண்டவன்) வரம்பைக்கடந்தவர்களை உகந்து
கொள்ளமாட்டான்'' (குர்ஆன் 2: 190)

எவர்கள்மீது அநீதஞ்செய்யப்பட்டதோ, அவர்களுக்கு யுத்தஞ்
செய்ய அனுமதிகொடுக்கப்பட்டிருக்கின்றது. மேலும், அவர்களுக்கு
உதவிபுரிய ஆண்டவன் வல்லமையுடையவனாயிருக்கும். எங்கள் இரட்
சகன் அல்லாஹ்வாயிருக்கும் என்று அவர்கள் கூறியதற்காக அவர்களை
அநீதமாக, அவர்கள் இல்லங்களிலிருந்து அப்புறப்படுப்படுத்தப்பட்
டது. ஆண்டவன் சிலரைக்கொண்டு சிலரைத்தடுத்து, விலக்காவிட்
டால், ஆண்டவனை அதிகமாக ஞாபகப்படுத்தப்படும் பாதிரிமார்களின்
தபஸிருக்கும் குகைகளையும், கிறிஸ்துவர்களின் கோவில்களையும்,



எஹூதிகளின் வணக்கஸ்தலங்களையும், முஸ்லிம்களின் பள்ளிகளையும்
உடைக்கப்பட்டிருக்கும்.'' (குர்ஆன், 22, 36: 40) மேற்குறிப்பிட்ட
திருகுர்ஆன் அம்சங்களைக்கொண்டு எப்படிப்பட்ட இதரமதஸ்தர்களு
டன் யுத்தம்புரியும்படி (எமது இஸ்லாம் மதம்) ஏவுகிறதென்பதை
எளிதில் உணர்ந்து கொள்ளலாம். சுத்தமான மனதுடன் எவனொரு
வன் திரு குர்ஆன்ஷரீபை வாசிக்கிறானோ, அவனுக்கு "முஸ்லிம்
களோடு யுத்தம் புரிகிறவர்களுடன் மாத்திரமே யுத்தம்புரியும்படி''
தீனுல் இஸ்லாம் ஏவுகிறதென்று எளிதில் உணர்ந்து கொள்ளுவான்.

திருநபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கும், அவர்
களின் சகாக்களுக்கும் சுமார் பதிமூன்று வருடகாலமாக மக்கத்துக்
காபர்களாற் எண்ணத்தொலைபா அட்டூழியங்கள் செய்யப்பட்டு வந்த
தை எவர்தான் அறியார்? இவ்வட்டூழியங்களை சகிக்கக் கூடாதவர்க
ளாய் சில முஸ்லிம்களை நேகஸ்-நஜ்ஜாஷி என்னும் ஓர் கிறிஸ்தவ
அரசனால்ஆண்டுவரப்பட்ட ஹபஷ்-அபிஸீனியா என்னும் தேசத்திற்
குப் போய் அடைக்கலம் புகும்படி, நபித்துவம் கிடைத்த ஐந்தாவது
ஆண்டில் திருநபி அவர்கள் கூற, அவ்வாறே அநேகமுஸ்லிம்கள்
அத்தேசத்திற்குப் போய் அடைக்கலம் புகுந்தார்கள். சமுத்திரத்
திற்கப்பாலுள்ள அத்தூரதேசத்திலும் முஸ்லிம்களை சமாதானமாய்
வாழவிடாமல், அவர்களை அங்கிருந்து அப்புறப்படுத்தபல வெகு
மதிகளை அத்தேசத்திற்கு (மக்கத்து முஷ்ரிக்குகள்) கொண்டு சென்
றார்கள். ஆனால், அவர்கள் நாடிப்போனகாரியங்களொன்றும் அங்கு
நிறைவேறவில்லை. ஆகவே, பலனற்றவர்களாய் திரும்பி மக்கத்துக்கு
வந்து, அங்குள்ள மற்றமுஸ்லிம்களை முன்னிலும் பதின்
மடங்கு அதிகமாக மிருகத்தனத்துடன் அட்டூழியஞ் செய்ய
தலைப்பட்டு விட்டனர். கடைசியாகக் காபிரீன்களின் அட்டூ
ழியத்தை சகிக்கமாட்டாதவர்களாய், அங்கிருந்து பத்துநாட்
கள் பிரயாணத்திற்கப்பாலுள்ள மதினமா நகரத்திற்குப் போய்ச்
சேர்ந்தார்கள். சமுத்திரத்திற் கப்பாலுள்ள அபிஸீனியா தேசத்
தில் சமாதானத்தோடு முஸ்லிம்களை வாழவிடாத மக்கத்துக் காபர்
கள்தானா, மதீனத்தில் முஸ்லிம்களை சமாதானத்தோடு வாழவிடு
வார்கள்? மக்கத்திலிருந்து ஏழுநாட்கள் பிரயாணத்திற்கப்பாலுள்ள
"பதர்'' என்னுமிடத்திற்குப்போய் முஸ்லிம்களுடன் யுத்தஞ்செய்
தார்கள். அதற்குப்பின் மதீனாவிலிருந்து மூன்று மைல் தூரத்தி
லுள்ள "உஹத்'' என்னுமிடத்தில் மற்றொரு பாரியயுத்தம் நடை
பெற்றது. இதற்குப்பின் மக்கத்துக்காபர்கள் ஒரு பெருஞ்சைனியத்
துடன் மதீனமா நகரையேவந்து சூழ்ந்துகொண்டனர். அவ்வமயம்

முஸ்லிம்கள் மதீனத்திற்கு வெளியே சுற்றுப்புறங்களில் "அகழிகள்" வெட்டித்தற்காப்புச்செய்து கொண்டனர். இதற்காகவே இந்த யுத்தத்திற்கு "அகழியுத்தம்" என்று பெயர்சொல்லப்பட்டது.

மேற்சொன்ன யுத்தங்கள் நடந்த இடங்களைக் கூர்ந்துநோக்குவோமாயின், அவை மக்கத்திற்குத் தூரமும், மதீனத்திற்கு சமீபமாயுமிருப்பதைக் காணலாம். எனவே, மக்கத்துக்காபர்கள் மதீனத்திலுள்ளவர்களோடு யெதிர்த்து சமர்புரிந்தார்களென்று உணர்ந்து கொள்ளலாம். ஆகவே, முஸ்லிம்களாற் செய்யப்பட்டுள்ள அத்தனை யுத்தங்களும் தற்காப்புக்காகவேயன்றி, மதத்தைப்பரத்துவதற்காக வல்ல வென்பது தெற்றெனவிளங்கும். மேலும், "காபர்களை வாளுக்கு இரையாக்கு" என்பது தீனுல் இஸ்லாத்தின் கட்டளையாயின், இக்காபர்களை இஸ்லாமிய அரசாங்கங்களில் எங்ஙனம் குடிஜனங்களாக விருப்பதைக் காணமுடியும். அன்றுமுதல் இன்றுவரை காபரீன்கள் இஸ்லாமிய ஆட்சியின்கீழ் குடிஜனங்களாகவிருந்து வருதை எவருமறிவர். இவ்வாறு இருந்துவருவது ஏனையமதஸ்தர்களை, அவர்கள் மத விஷயத்திற்காக கொன்று போடும்படியான ஏவல் இஸ்லாம் மதத்தின் ஏவல் அல்லவென்பதை ஸ்திரபடுத்துகிறது. பொய்சொல்லி ஓர்மதத்தை மாறுபடுத்திக்கூறுவது யோக்கியர்களுக்கழகல்ல. மற்றமதங்களைப் பொய்யானதென்று கூறுவதால் தம் மதம் உண்மையான தாகமாட்டாது. தன்மதத்தின் உண்மைகளை வெளிப்படுத்தி, தம்மதம் உண்மையானதென ரூபித்துக் காட்டவேண்டும். அப்பொழுதுதான் ஜனங்கள் அம்மதத்தை யுண்மையான மதமென்று ஒப்புக்கொள்ளுவார்கள்.

மூன்றாவது 'பாபிகளிடம் கருணை காட்டல்'

முஸ்லிம்களாற் விசுவாசிக்கப்பட்டு வரும் கடவுள் பாபிகளிடம் கருணைகாட்டுவதால், அவர் தயாளகுணமுடையவரல்ல வென்று ஸ்வாமியார் ஒப்பாரி வைக்கிறார். பாபிகளுடைய பாவத்தை மன்னிப்பதால் கடவுள் தயாளகுண முடை யவரல்லராயின், இதோ, யஜுர், 20:9-ல் "உன்னை மறப்பவனையும் நிந்திப்பவனையும் பொறுத்தருளும் பெருந்தகையான் நீ! அப்பெருங்குணத்தை யான்பெரும்வழியை எனக்களிப்பாய்" என்று அக்கினிதேவனைப் பிரார்த்திக்கும்படி ஏவப்பட்டிருக்கின்றது. (ச. பிரகாசம் அத்: 7. பக்கம், 51.) ஆண்டவன் அடியார்களுடைய பாபத்தை மன்னிக்காதவனாயின் அவனிடத்தில் பாவங்களை மன்னிக்கும்படி கேட்பதும், பொறுத்தருளும் பெருந்தகையா!" எனக் கூறுவதும் அறிவீனமன்றோ? மன்னிப்பு விஷயத்தில் (ஆரியசமாஜியாரால்) ஆட்



க்ஷேபித்தெழுதப்பட்டிருக்கும் விஷயங்களுக்கு மற்றோர் சமயம் விரிவாய் மறுப்பெழுதுவேன். (இன்ஷா அல்லாஹ்.)

முக்கிய குறிப்பு:—ரிஷிதயானந்தரால் இயற்றப்பட்ட "சத்தியார்த்தப் பிரகாசம்" என்ற நூலின் 14, வது அத்தியாயத்தில், திருகுர்ஆன்மீது செய்யப்பட்டுள்ள ஆட்க்ஷேபணைகள் ஒவ்வொன்றுக்கும் தக்க ஆதாரங்களுடன் "தயானந்தரும், தீனுல் இஸ்லாமும்," என்ற நாமத்தோடு எம்மால் எழுதப்பட்டு, ஒருவாறு முடிவாகிவரும் புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டதே மேற் காட்டிய வியாசம். இந்நூல் சீக்கிரம் அச்சிட்டு வெளிவர வேண்டு மென ஆவலுள்ள ஒவ்வொரு முஸ்லிம் சகோதரர்களும் இதற்குப் பொருளுதவி செய்ய வேண்டியதவசியம். அபிமானமுள்ள நம்முஸ்லிம் சகோதரர்கள் பணம் அனுப்பியுதவிபுரிவார்களாயின், இப்புத்தகம் அதிசீக்கிரத்தில் அச்சிட்டுவெளிவந்துவிடும். இத்தகைய உத்தேசமுள்ள சகோதரர்கள் கீழ்க்கண்டவிலாசத்திற் கனுப்பவும்.

"Shibli Manzil"
Princes Gate,
Colmobo.

எ. எஸ். அப்துல் கப்பார்.

---

## ஹஜ்ரத் மாலிக் தீனார் ரஹ்மதுல்லாஹி அலைஹி

ஹஜ்ரத் மாலிக் தீனார் திம்ஷ்கி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் பெயர் மாலிக். அவர்களின் தகப்பனார்பெயர் ஸாபித். அவர்கள் திம்ஷ்க் தேசத்திலிருந்தார்கள். பொதுவாக அவர்களை "மாலிக் இப்னு தீனார்" என்று சொல்லப்படுவது தப்பானதாகும். ஏனெனில் மேற்கூறியதற்கு "தீனாருடைய மகன் மாலிக்" என்பதாகும். அவர்களின் பிதாவின் பெயர் தீனாரல்ல. அவர்கள் சிறுவயதாகவிருக்கும்போழ்தே தொழுகிறவர்களாகவும், பேணுதலுடையவர்களாகவும், காரணம் வெளியாகுபவர்களாகவும் தஸ்பீஹ் செய்கிறவர்களாகவு மிருந்தார்கள்.

தீனார் என்றபெயர் கிட்டியவிதம்:—அவர்கள் ஓர் சமயம் ஒரு கப்பலில் பிரயாணஞ்செய்தார்கள். நாடிய துறைமுகம் கப்பல்சென்றதும், கப்பலதிகாரி ஹஜ்ரத் அவர்களிடம் கப்பல் சத்தத்தைக்கேட்

டான். ஆனால், ஹஜ்ரத் அவர்களிடம் யாதொன்றுமில்லாததினால், “நான் யாதும் செல்வமற்றவன். ஆகவே, என்னிடம் கப்பல் சத்தம் கேட்கவேண்டாம். அல்லாஹுதஆலா உங்களுக்கு நன்மையளிப்பானாகவும்” என மொழிந்தார்கள். இதைக்கேட்டக் கப்பல் மாலுமிகள் அவர்களை நிர்ப்பந்தித்து, நையப்புடைத்து விட்டார்கள். ஆகையால், அவர்கள் பிரக்ஞையற்றுப்போயினர். அச்சமயம் சமுத்திரத்தில் ஓர் பயங்கரமான கொதிப்புண்டாயிற்று. அதில் எண்ணிறந்த மச்சங்கள் தங்களின் வாய்களில் ஓர் “தீனார்” தங்கக்காசைக்கொண்டதாக தோன்றலாயின. ஹஜ்ரத் மாலிக் அவர்கள் பிரக்ஞையுற்றபோழ்து, ஒரு மீனின்வாயிலிருந்த ஓர் தீனாரையெடுத்து கப்பல் மாலுமியிடம் கொடுத்தார்கள்.

கப்பலிலுள்ள ஏனைய பிரயாணிகளும், மாலுமிகளும் இதைக் கண்ணுற்று வெகு ஆச்சரியமடைந்தனர். மாலுமிகளோ, உண்மை மனத்தோடு தாங்களிழைத்த குற்றத்தை மன்னித்தருளும்படியாய் ஹஜ்ரத்மாலிக்தீனார் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களிடம் மிகவநுதிக்கேட்டுக் கொண்டார்கள். ஆகவே, ஹஜ்ரத் அவர்கள் மாலுமிகளின் குற்றத்தை மன்னித்து “நேசர்களே! இந்த இழியசெய்கையிலும் நமக்கு நலவு இருக்கிறது” எனமொழிந்து “ஒரு காலம்வரை என்னுடைய ஹிர்தயம் என்னை மேன்மைப்படுத்தி, அதிகௌரவத்தைக்கொடுத்து வந்ததுடன், ஓ மாலிக்! நீர் உள்ளங்கத்திலும் உயர்ப்பதவியையுடையவர் என மொழிந்து கொடிருந்தது. இன்று தங்கள் சகோதரர்கள் என்னை அடித்தபோழ்து, நான் என் ஹிர்தயத்தைநோக்கி “உலகில் இதுதான் உன்னுடைய கண்ணியம்; இனி நீன் மறதியிலும் பெருமைபாராட்டக்கூடாது” என மொழிந்தேன் என்று சொன்னார்கள். அத்தினத்தி விருந்து அவர்கள் “மாலிக் தீனார்” எனகியாதி யுற்றார்கள் என அஹ்வாலுஸ்ஸாதிகீனில் வருகிறது.

பேயர் பெறுவதை அபேட்சித்தல் கியாதியைத் தேடுவது, பெயர் பிரபல்யமாவதை அபேட்சிப்பது ஆகியவைகள் மனிதனுடைய இயற்கைக்குணமே. ஆனால், உண்மை, நம்பிக்கை, நல்லெண்ணம் போன்றவைகளோடு கிடைக்கும் கியாதியைப்பற்றி நாமொன்றும் சொல்லுவதற்கில்லை. உதாரணமாக:—ஒருவன் ஆதரவற்றவர், அனாதை, ஏழை போன்றவர்களுக்கு அல்லாஹ்வுக்காக உதவி புரிகிறான். அதன்பொருட்டு “தர்மவான்” என்ற கண்ணியத்தை யடைகிறான். இப்படிப்பட்டவைகளினால் யாதும் கெடுதியில்லை. ஆனால், யாதொருவன் பெயர்பெறும் பொருட்டு, தானம் தருமங்கள் செய்கி



றான். அதில் அல்லாஹ்வின் நட்பை நாடாததின் பொருட்டு முகஸ்துதியும், பாபமுமாகும். ஆகவே, அவன் அடையும் பெயரின் பெருமையில் யாதும் நன்மையில்லை. ஹஜ்ரத் மாலிக்தீனார் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் எழுதியிருப்பதாவது:—நான் மிகுதமாக திம்ஷிக் ஜாமிஅ மஸ்ஜிதில் தொழுதுகொண்டிருந்தேன். அம்மஸ்ஜிதின் இமாம் சாஹிப் அவர்களுக்கு பெரும் மரியாதை செய்து, அதிக கண்ணியமாக திம்ஷக்கியர்கள் நடத்திவந்ததோடு, அவரைத் தங்களின் தலைவராகவும் பாராட்டி வந்தார்கள். அவ்விமாம் சாஹிப் அவர்கள் மரணித்தபோழ்து “என்னை அம்மஸ்ஜிதுக்கு முதவல்லியாகவும், இமாமாகவும், செய்து விட்டார்களாகில், திம்ஷக் ஜனங்கள் அதிகௌரவமாகவும், மரியாதையாகவும் நடத்துவார்கள் என” என் ஹிர்தயம் எண்ணிற்று. ஆகவே, இவ்வெண்ணம் என் மனதில் தோன்றியது முதற் “ஜனங்கள் என்னை பெரியதக்வாவுடையவரென்றும், பெரும் பேணிப்புடையவ ரென்றும் எண்ணிக்கொள்வார்களென்று, நான் மஸ்ஜிதிலேயே “இஃதிகாப்” மூலையில் உட்காரத் தொடுத்தேன். ஒவ்வொரு நேரத்தையும் தஸ்பீஹ்-ஜபம் செய்வதிலேயே கழித்து வந்தேன். இவ்விதம் ஒரு வருடம் கழிந்தது. ஆனால், ஜனங்கள் என்புறத்தில் நோட்டமிடவில்லை. உலகில் முகஸ்துதியைக் காட்டிலும் வேறுஇழிவான காரியமொன்றுமில்லை என்று தெரியவந்தது உடனே உண்மையான மனதோடு, ஓ நாயனே! என் குற்றத்தைப் பொறுத்தருள் என மன்னிப்பு கேட்டுக்கொண்டேன். இதன் பின்பு “இஃதிகாபை” முடித்துவிட்டு, மஸ்ஜிதில் பாலான தொழுகைகளை மட்டும்தொழுதுகொண்டு, மற்றதொழுகை, தஸ்பீஹ் போன்றவைகளை மறைவாக தனித்த இடத்தில் நடத்திவந்தேன். ஒரு மாதமாகுவதற்குள் திம்ஷகின் முக்கியஸ்தர்களின் ஓர் பிரதிநிதிக் கூட்டமொன்று என்னிடம் வந்து, “என்னை ஜாமிஅ மஸ்ஜிதின் இமாம் உத்தியோகத்தையேற்று, ஜனங்களுக்கு தொழுகவைக்கும்படியாய் பட்டணத்தின் ஜனங்கள் பிரியப்படுகிறார்கள்” என மொழிந்தார்கள். இவ்விண்ணப்பதைக்கேட்டு யான் மௌனமுற்றவனாக மனதிற்குள் ஓ நாயனே! இப்பிரதிநிதிக் கூட்டத்தனர் கூறும் உத்தியோகத்தையடைய வேண்டுமென்ற எண்ணங்கொண்டு, ஒரு வருஷம்வரையில் இஃதிகாப் இருந்தேன். அதில் சித்திபெறவில்லை. ஆனால், உண்மையோடு உன்னை வணங்குவதில் ஈடுபட்டிருக்கும் நிலைமையில் முக்கியஸ்தர்கள் என்னை “இமாம்” வேலையையொப்புக்கொள்ளும்படியாய் கேட்டுக் கொள்ளுகின்றனர். ஆனால், இவ்வுத்தியோகத்தில் முகஸ்துதியும், பெயர்ப்பெறுவது போன்றவைகள் கலந்

திருப்பதனுல், இதை யேற்பது தகுதியல்லவென தீர்மானித்துக்
கொண்டேன். ஆகவே, நான் இமாம்வேலையை யொப்புக் கொள்ளமுடி
யாதென தெளிவாய் சொல்லிவிட்டேன். பிரதிநிதிக்கூட்டத்தார்கள்
என் மறுப்பான பதிலைக்கேட்டு திரும்பிச் சென்றனர். அதன் பின்பு
உண்மை மனத்தோடு தனித்த மறைவான யிடத்தில் அல்லாஹுதஆலாவின் வணக்கத்தை நடத்திவந்தேன்.

மாலிக்கும், நாஸ்திகனும்: ஹிஜ்ரீ 126-வது ஷஅபான்மீ 20உ
யில் ஹஜ்ரத் மாலிக் தீனர் ரஹ்மதுல்லாஹி அலைஹிக்கும், தஹரியா
வென்ற நாஸ்திகனுடன் அல்லாஹுதஆலா உண்டென்பதைப்பற்றி
தர்க்கம் நடைபெற்றது. ஹஜ்ரத்மாலிக் அவர்கள் தஹரியாவுக்குமுன்
சபையில் நீண்டதோர் பிரசங்கத்தில் கூறியதாவது:—ஓ மனிதனே!
கடவுள் உண்டென்பதற்கு உன்னிடத்தில் பல அத்தாட்சிகள் இருக்
கும் நிலைமையில், நீன் கடவுள் இல்லை என வாதிப்பதைக்காண
யெனக்கு அதியாச்சரியமாக விருக்கிறது. ஏனெனில், ஒவ்வொரு
பொருள்களையும் உண்டாக்கியவன் இல்லாதிருக்க முடியாது. என நீன்
நன்கு அறிவீர், உம்மீதுள்ள வேஷ்டியை நோக்குமிடத்து, அதை
நெய்தவன் ஒருவன் இருக்க வேண்டுமென்றும், அவ்விதம் நெய்பவன்
இல்லாதிருக்கில், அப்பிடவையுண்டாயிருக்க முடியாது என அறிகி
ரோம். ஒரு கட்டடத்தைப்பார்க்கும்போழ்து, அதைக்கட்டுவித்தவன்
ஒருவன் இருக்கவேண்டுமென்றும் தெரியவருகிறது. ஆகவே, ஒவ்
வொரு வஸ்துவிற்கும் அதையுண்டாக்கியவன் ஒருவன் இருக்கிறான்
என நிரூபமாகிறது. ஓ மனிதனே! இப்பாரிய வானம், சூரியன், சந்
திரன், நட்சத்திரங்கள், உயரிய மலைகள், பயங்கரமான சமுத்திரங்
கள் ஆகியவைகள் அவைகளைப் படைப்பவனன்றியே உண்டாகிவிட்ட
னவா? உலகிலுள்ள அசைபொருள்களை அசையச்செய்யவும் உலகை
சீர்பெற நடத்தவும் கடவுள் ஒருவர் இருக்கவேண்டுமென்றும் தெரிய
வருகிறது. ஓ மனிதனே! நீர் வியாதியுறும் போழ்து, உண்மை
யான அல்லாஹுதஆலாவின் உத்திரவன்றி சுகம்பெற முடியாத
யுன் இழியநிலைமையைநோக்கு. நீன் நட்புக்கொள்ளும்ஓர் குழந்தைக்கு
வியாதித்தொட்டுவிடில், அது சீக்கிறம் விலகி, குழந்தை சுகம்பெற
வேண்டுமென்று அநேக முயற்சி செய்கிறாய். ஆனால், அக்குழந்தை
சுகமடையாமல் இறந்துபோகிறது. இது யாருடையவேலை? நண்
பனே! உன்னையும், என்னையும், மற்றெல்லா யுலகஜீவாத்துமாக்களை
யும் படைத்தவன் நிச்சயமாய் ஒருவனிருக்கின்றான். அவனே வணங்கு
வதற்குத் தகுதியுடைய "அல்லாஹ்" வாகும் என விபரித்து முடித்
தார்கள்.

(தொடரும்.)

